

திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி ஆலயத்தில் பணியில் இருக்கும்போது இறந்து போன பணியாளர் புருசோத்தமன் போத்தி அவர்களின் துணைவியார் திருமதி ஸ்ரீதேவி அவர்களிடம் கருணைத் தொகை ரூ. 30 000-க்கான காசோலையை மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் புலவர் செங்குட்டுவன் அவர்கள் வழங்குகிறார்கள். சட்டமன்ற உறுப்பினர் திரு. என். பெரியசாமி மற்றும் இணை ஆணையாளர்-ஆலய நிர்வாக அதிகாரி திரு. தி. ஜெயராமன் பி.ஏ.பி.எல். உடன் உள்ளார்கள்.

முகப்பு :

அருள்மிகு சுவாமி ஐயப்பன்.

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி நெடுஞ்சாலை,
சென்னை—600 034.
தொலைபேசி எண்: 8279407

ஆசிரியர் :
கவிஞர் டாக்டர் **த. அமிர்தலிங்கம்,** M.A.,Ph.D.

| மாலை : | திருவள்ளுவர் ஆண்டு 2027 தாது ஆண்டு ஐப்பசி-கார்த்திகை | மணி : |
|---|---|---|
| 38 | அக்டோபர்-நவம்பர் 1996 விலை ரூ. 6—00 | 10 & 11 |

## திருக்கோயில் வாசகர்களுக்கு அறிவிப்பு

அன்பு வாசகர்களே ! வணக்கம்,

திருக்கோயில் திங்கள் இதழின் உறுப்பினர் களாகச் சேர விருப்பம் உள்ளவர்கள்.

உயர்திரு **ஆணையர்** அவர்கள்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
சென்னை-600 034.

என்ற முகவரிக்கு பணவிடை அல்லது வங்கி வரைவோலை மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

**சந்தா விவரம்**

| | | | |
|---|---|---|---|
| அரை ஆண்டு | .. | ரூ. | 18-00 |
| ஓர் ஆண்டு | .. | ரூ. | 36-00 |
| ஆயுள் | .. | ரூ. | 300-00 |

சந்தாதாரர்கள் முழுமுகவரியைத் தெரிவிக்க வேண்டும்,
முகவரியில் மாற்றம் இருப்பின் உடனுக்குடன் தெரிவித்திடவும் வேண்டும்.

## பொருளடக்கம்



இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளியீடு



# இறைவன் பெயரில் பூசல்கள் வேண்டாம்

மாண்புமிகு தமிழக முதல்வர்
முத்தமிழ் அறிஞர்

***டாக்டர் கலைஞர்***
அவர்கள்

ஒரு பக்தன் ஆலயமொன்றில் 'ஆண்டவனின் சிலையை நோக்கிக் கால் நீட்டிப்படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தானாம்.

கோயில் பூசாரியார் அதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்து அவனை எழுப்பி வேறு பக்கம் கால் நீட்டி படுத்துக் கொள்ளடா! பர'ம பாதகா!' என்று வசை பொழிந்தாராம்.

பூசாரியார் ஆணைக்குக் கட்டுப்பட்டு அந்தப் பக்தன், கால்களை வேறு பக்கம் நீட்டிப் படுத்துக் கொண்டானாம்.

என்ன ஆச்சரியம்! அவன் கால் நீட்டிய திசையில் ஆண்டவன் சிலை வந்து அமர்ந்து விட்டதாம்.

பூசாரியாருக்கு ஒன்றுமே புரியவில்லையாம். வில்லும் அம்பும் ஏந்திய அந்த ராமபிரானின் விக்கிரகத்தைப்பார்த்து 'ஹே ராமா' என்ன இது? என்ன லீலா வினோதம்!' என்று துடித்துப் பதைத்துக் கேட்டாராம்.

உடன் விக்கிரகத்திலிருந்து வெளிப்பட்ட ராமபிரான் அந்தப் பூசாரியை நோக்கி ஒரு புன்கையை நெளியவிட்டு திருவாய் திறந்தாராம்.

''அப்பனே பூசாரியாரே! அந்தப் பக்தன் என் விக்ரகத்தை நோக்கிக் கால் நீட்டக் கூடாது என்றீரே! நான் உம்மைக்கேட்கிறேன். பதில் சொல்லும். ஆண்டவனாகிய நான் இல்லாத இடம் எது? எந்தப் பக்கம் கால் நீட்டினாலும் நான் அந்தப் பக்கத்தில் மட்டுமல்ல; எல்லாப் பக்கத்திலும் இருக்கிறேன் என்ற உண்மையை அறியாத உமக்கு எம்மை பூஜை செய்ய அருகதையும் உண்டோ?''




ராமபிரானாம் அந்த ஆண்டவனின் கேள்விக்கு விடை அளிக்க முடியாமல் பூசாரி யார் தலை குனிந்து வெட்கிப் போய் வியர்வை கொட்டிட விழுந்தாராம் ஆண்டவனின் பாதார விந்தங்களில்.

''ராமா! நீ எங்கும் இருப்பாய்! எல்லா இடங்களிலும் இருப்பாய். இந்த இடத்தில் மட்டுமே இருப்பாய் என்று சொல்வதெல்லாம் தெளிவில்லாத பேச்சு. இப்போது என்னைத் தெளிய வைத்துவிட்டாய்! அங்கு இங்கு எனாதபடி எங்கும் இருப்பவனே! என்னை மன்னித்துவிடு; உன் மகாத்மியம் அறியாததற்காக இந்த ஜீவனை மன்னித்து விடு''.

பூசாரியார் புலம்பினார். ஆண்டவன் மறைந்து விட்டார். 'மன்னித்தேன்'. என்று அருள்பாலித்தபடியே.



திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தில் பணிக் காலத்தில் இறந்த பணியாளரின் வாரிசுக்கு மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் புலவர் செங்குட்டுவன் அவர்கள் பணி நியமன உத்தரவு வழங்குகிறார்கள்.

# வினை வழி உயிர்


## வ. ராமதாஸ், இ.ஆ.ப.,

ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34


ஒருவன் தன்னைக் கட்டுபடுத்திக் கொள்ளாவிட்டால் இன்னொருவன் கட்டுப்படுத்துவான். ஒரு சமுதாயம் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளாவிட்டால் மற்றொரு சமூகம் கட்டுப்படுத்தும். கட்டுப்பாடு மீறுங்கால் கசப்பான முறையில் கட்டுப்பட வேண்டி வரும் இது இயற்கையின் நியதி. இதுவே யாவற்றையும் கட்டுப்படுத்திக் கொண்டுதான் யார் கட்டுக்கும் அடங்காமல் இருக்கும் கர்மாவின் ஆட்சியாகும். கர்ம பந்தமே ஒருவனை சம்சார பந்தத்தில் உழலும்படிச் செய்கிறது. மீண்டும் மீண்டும் உயிரினை உடம்புகளில் கட்டிப் போடுகிறது. செய்த தப்பினைப் பொறுத்தே தண்டனை கொடுக்கப்படுகிறது. ஆசைகளைப் பூர்த்திசெய்து கொள்ள வேண்டி கண்டதை எண்ணி, கண்டதைச் செய்து, கண்டதைத் தின்று கண்டபடி பேசி, விபரீதமான புதிய கர்மாக்களை உண்டு பண்ணிக் கொண்டு போனால், என்றும் வாழ்வில் விடிவு காலம் வராது.

'கர்மா' அல்லது 'வினை' என்பது மூன்று வகைப்படும். இவைகளை சஞ்சிதக் கர்மா, பிராரப்தக் கர்மா, ஆகாமியக் கர்மா என்று ஆன்றோர் பிரித்துள்ளார்கள். இம்மூன்று கர்மாக்களும் ஒன்றுக்கொன்று தொடர்புடையது. ஒன்று மற்றொன்றுக்கு காரணமாகவும் அடித்தளமாகவும் அமைகிறது.

பல பிறவிகளில் செய்த வினைகளின் தொகுப்பாகச் சட்டித் தேக்கி வைக்கப்பட்டுள்ளது. (Bank Balance) என்று சொல்லலாம். நல்வழியில் சேர்த்த பணமும், கெட்ட வழியில் சேர்த்த பணமும் வங்கியிருப்பு எனலாம். கர்மவினை என்பது ஒரு செயலைச் செய்யும் போதே விளைவது. ஒருவனுக்குத் தெரிந்தாலும், தெரியாவிட்டாலும், விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் யார் தடுத்தாலும் நிற்காமல் அவன் கணக்கில் கண்டிப்பாக ஏற்றப்படுவது. பாவ புண்ணியங்களின் கூட்டு சஞ்சிதம். நரகம் என்பது ஒன்று உண்டு. இதில் சந்தேகம் தேவையில்லை. சஞ்சிதக் கர்மாவில் ஒரு பகுதி நரகத்தில் யாதனா சரீரம் என்று ஒரு சரீரத்தின் மூலம் கொடுமையான தண்டனைகளை அனுபவித்தது போக மீதி உள்ளதை பூலோகத்தில் பல பிறவிகளில் அனுபவிக்க வேண்டியுள்ளது. மனிதன் படைக்கப்படும் போது முன்பு நடந்தவைகளையும், பின்பு நடக்கப்போவதையும் மனிதனில் மூளைக்கு எட்டாமல் அவன் சிந்தனைக்குச் சிக்காமல் அடுத்தவன் மனதில் உள்ளதைஅறிய முடியாமல் படைக்கப்படுகிறான். ஆனால், யூகிக்கும் தன்மையும் சிந்தனை சக்தியும் அமைத்துப் படைக்கப்படுகிறான். ஆகவே, எந்தப் பிறவியில் என்னென்ன கர்மாக்களை அனுபவித்துத் தீர்த்தோம் என்பதையும் என்னென்ன புதிய கர்மாக்களை சேர்த்துக் கொண்டோம் என்பதையும் நாம் உணர முடிவதில்லை.

சிலருக்கு 'நாடி'கள் மூலமாகப் பிறவிகள் பற்றியும் கர்மாக்கள் பற்றியும் சொல்லப்பட்டிருக்கும். முழுமையான அளவு பிறவி உண்மை பற்றியும் கர்மா கர்மா பலன்கள் பற்றியும் நாடிகளிலோ ஜாதகம் மூலமாகவோ உணர முடியவே முடியாது. அதிரகசியமாகவே இவைகள் பாதுகாக்கப்படுகிறது பலன்கள் அனுபவிக்கும்படி செய்யப்பட்டுள்ளது. ஆனால் சகலமும் தெரிந்த ஒரு ஒருவரால் பிறவிகளை கர்மாக்களை அறிய முடிந்தாலும் கர்மப் பலன்களை அனுபவிக்கும்படியாகவே அவரும் செய்வார். ஆகவே சீடனானவன் தனக்கு வரும் ஆபத்தை குரு தெரிந்து கொண்டிருந்தும் தனக்கு உபகாரம் செய்யவில்லையே என்று குருவை நிந்திப்பது குருதோஷமாக முடியும். எந்த ஒரு கால கட்டத்திலும் "குரு"வை நிந்திக்கவே கூடாது. அதேபோல் தெய்வத்தையும் நிந்திக்கக் கூடாது. ஆக கர்மா என்ற அபூர்வ சக்தி எக்காலத்திலும் தாமாக அழியவோ விலகவோ வாய்ப்பே இல்லை என்பதைக் கட்டாயமாகவும் புரிந்து கொள்ள வேண்டும். கர்மசக்தி என்பது 'ஸ்தூல உடல்' கொண்டுள்ள அனைத்து உயிரினங்களுக்குப் பொதுவானதாகும். ஆனால் மனிதனுக்கு மட்டுமே சில கர்மாக்களை அதிகரிக்கவும் சிலவற்றைக் குறைக்கவும் புதிய கர்மாக்களை உருவாக்காமல் இருக்கவும் செய்யுமாறு குருவருளும் திருவருளும் உதவி செய்ய முடியும். மனிதனை தவிர ஏனைய கீழ்நிலையில் உள்ள உயிர்கள் பழைய கர்மாக்களை அனுபவிக்கும். புதிய கர்மாக்களை அவ்வுயிரினங்கள் உண்டாக்குவதில்லை. மனிதனுடைய செயலினால் மற்ற உயர்

களுக்கு எளிதில் விமோசனம் கிடைக்கும்படியும் அமையும். உதாரணமாக ஒருவன் பட்டு வேஷ்டியை உடுத்திக்கொண்டு ஒரு 'மகானை' தரிசிக்கச் சென்றால் அம்மகான் வழங்கும் ஆசியினால் முதலில் பயனடைவன பட்டு வேட்டிக்குக் காரணமான பட்டுப்புழுக்கள் ஆகும். அப்பட்டுப் புழுக்கள் அனைத்தும் அடுத்த பிறவியில் மனிதனாக பிறக்கும் என்றும் ஆன்றோர்கள் கூறுவார்கள். ஒரு செயல் செய்யப்படும்போது புதியதாக உண்டாகும் வினை 'ஆகாமியம்' எனப்படும். இவை பாதுகாக்கப்பட்டு வைக்கப்படுகிறது அப்போது 'சஞ்சிதம்' எனப்படுகிறது வங்கியில் 'பணம்' இருப்பில் உள்ளது போல் எனலாம். ஒவ்வொரு பிறவியிலும் 'சஞ்சித' கர்மாவின் ஒரு பகுதி பகிர்ந்து வழங்கப்படுகிறது இப்படி பகிர்ந்து வழங்கப்படும் 'கர்மா' பிராரப்தம்' எனப்படும். பிராரப்த கர்மா ஒருவனுடைய ஆயுள்காலம் முழுவதும் பரவி விரிந்து தொடரும்படியாக அமைக்கப்படுகிறது. உயிரில் கலந்து 'மாயை யாக உயிரையும் உயிர் கொண்ட உடலையும் பற்றிக் கொண்டு 'பிராரப்தகர்மா' பலனைக் கொடுக்கவல்லது. காலதேவனின் கணக்குப்படி ஒவ்வொரு வினாடியும் நடக்க வேண்டிய சம்பவங்களை நிர்ணயம் செய்து உயிர் உடல் வழியாக பலனை அனுபவிக்கும்படியாக மிகமிக அழுத்தமாக அழிக்கவே முடியாதபடி அமைக்கப்படுகிறது.

இவ்வகையான பிராப்த கர்மா மனிதன் தான் முன்கூட்டியே அறிந்து பயன் பெறும் வகையில் மகான்கள் ஜோதிடம் மற்றும் நாடி சாஸ்திரங்களை வகுத்துக் கொடுத்திருக்கின்றனர். தெய்வ சக்திகள் அருள்வாக்கிலும் 'பிராரப்த கர்மாவை பேசும். தெய்வ அருள் குருவருள் இவைகளும் பிராரப்தத்தின்படியே அமையும். ஆனால் ஜோதிடம் நாடி மற்றும் அருள்வாக்கில்கூட காணமுடியாதபடி சில ரகசியங்கள் வாழ்க்கையில் புதைந்து கிடக்கும். இவற்றை அறிவது மிகக் கடினம். அப்படி தெரிவிக்கப்பட்டாலும் புரிந்து கொள்வது கடினம் புரிந்து கொண்டாலும் செயல்படுத்துவது கடினம். இதுவே மாயை எனப்படும். நாம் மாயைக்குள் சிக்கியுள்ளோம் என்று தெரிந்து கொள்வதற்குள் பல ஜென்மங்கள் முடிந்துவிடும்.

எத்தனைதான் துருவித்துருவி ஜாதகம் நாடி இவைகளைப் பார்த்தாலும் பிழை நேரிடும். ஏதோ உட்சாந்திக்காக மன்சாந்திக்காக இவைகளைப் பார்க்கலாமே தவிர மனித அறிவைக் கொண்டு முற்றிலும் சரியாக எதையும் கூறவே முடியாது. அனைத்துமே ஈஸ்வரன் திருவடித் திருவருள் பிடியில் அமைந்துள்ளதால் அப்படி அமைந்தபடியே நடப்பதால் ஈஸ்வரப் பிரார்த்தனையே நன்மை கொடுப்பதாக அமையும். அதே நேரத்தில் செய்யும் பிரார்த்தனை-பூசைகளுக்குப் பலன் உண்டு. சில பல நாம் உணர்ந்து கொள்ளும் படியாகவும் சில நாம் உணர முடியாமலும் அமையும். சில சமயங்களில் பலனே இல்லாமலும் போகும். சிலவற்றில் எதிர்ப்பலனாகவும் அமையும். குளிக்கப் போய் சேற்றை பூசிக் கொண்டது போல் அனைத்துமே சித்த சுத்தி-காரியசுத்தி பொருள் சுத்தி இவற்றைப் பொருத்து அமையும். ஆகவே பூசைகளில் சாஸ்திர சம்பிரதாயங்களில் நம்பிக்கை வேண்டும். தெய்வங்கள் மற்றும் மகான்கள்கூட மனிதராக பூமியில் அவதாரம் எடுக்கும்போது செய்யும் காரியங்களுக்கு ஏற்ப பலாபலன்களை அனுபவிக்க வேண்டும் என்று ஒரு நியதிஉண்டு. தன் பக்தர்களுக்கு விமோசனம் தந்துவிட்டு தான் செய்த கர்ம பலனையும்அனுபவிக்கும் பொருட்டு சாதாரண மனிதனாக வாழ்ந்து வருவர். எந்த ஒரு அவதாரமும் காரண காரியங்களை முன்னிட்டே நடப்பதுதான். அவதார புருஷர்கள் மிக விரைவில் தங்களைப் புரிந்துகொண்டு (ஞானம் பெற்று) விரைவிலேயே தங்களின் மூலக் கர்த்தாவிடம்போய் சேர்ந்து விடுவார்கள். அதற்கு தெய்வங்களும் மகான்களும் நேரடியாகவும் மறைமுகமாகவும் உதவி செய்வார்கள். 'வலிய வந்து ஆட் கொண்டு' குருவாக வந்து அவதார நோக்கத்தைப் பூர்த்தி செய்வார்கள்.

'ஆகாமியக் கர்மா' என்பது புதிய கர்மா கர்மாவின் உற்பத்தி. ஒரு காரியம் செய்யும் போதுஉண்டாவது. (Automatic and simultaneous) கண்களால் செய்யும்பணி, காதினால் செய்யும் பணி, மூக்கால் செய்யும் பணி, வாயால் நாக்கால் உடலால் செய்யும் பணி இவைகளும் மனதினால் செய்யும் பணியும் விளைவுகளை ஏற்படுத்துகிறது. ஒவ்வொரு உறுப்பினால் செய்யப்படும் செயல், செயலின் தன்மையைப் பொறுத்து அவ்வுறுப்புக்கு நன்மை தீமைகளை உண்டாக்குவதுடன் மற்ற உறுப்புகளுக்கும் விளைவுகளைப் பங்கிட்டுக் கொடுக்கும். செயலின் விளைவு செயலின் தன்மையைப் பொறுத்து ஒன்றுக்கொன்று பின்னி விடுவதால் சகல அங்கங்களையும் கட்டுப்படுத்தும், மனதை நிச்சயமாகக் கட்டுப்படுத்தி நன்மை கொடுக்கும்படியான செயல்களை மட்டும் செய்ய வேண்டும். ஒரு கடுமையான நிர்ப்பந்தத்தில் செய்யும் காரியம் என்றாலும் விதி விலக்கின்றி ஆகாமியக் கர்மா உருவாகி நின்று நிலைத்து உருத்துவந்து பிராரப்த கர்மாவாகிப் பலன் கொடுக்கும்.

கொடுத்ததைச் சரியாகப் பயன்படுத்தவில்லை என்றால் கொடுத்தது பறிக்கப்படும் என்று குருமார்கள் சொல்கிறார்கள். இறைவன் கொடுத்த சக்திகளைச் சரியாகப் பயன்படுத்த வேண்டும். நினைக்கும் சக்தி, பார்க்கும் சக்தி, பேசும் சக்தி, கேட்கும் சக்தி, அறிவின் சக்தி, ஞான சக்தி, ஞாபக சக்தி, கிரியா சக்தி, இச்சா சக்தி போன்ற பல மனித வாழ்வுக்கு போதுமான சக்திகளைக் கொண்டது ஆத்ம சக்தி. இந்த ஆத்ம சக்தியுடன் முன்ஜென்மங்களின் கர்ம சக்திகள் இரண்டறக் கலந்து பிரிக்கவே முடியாதபடி கட்டி வைக்கப்படுகிறது. இப்பிணைப்பை அதிரகசியமான மாயா சக்தியினால் மறைக்கப்படுகிறது. 'மாயை' என்ற மகாசக்தியினால் மயங்கியுள்ள ஒருவன் தான்



'மாயா' சக்திக்குள் இருக்கிறோம் என்ற உண்மையை உணருவதற்குள் பல ஜன்மங்கள் முடிந்து விடும். இதைத்தான் ஔவையார் 'மாயாப் பிறவி' மயக்கம் அறுத்து' என்று கூறியுள்ளார். உலக வாழ்வில் தான் செய்வதில் நல்லது எது கெட்டது எது என்று ஒருவன் உணர்ந்து கொள்ளும் சக்தி ( Common Sense ) எல்லோருக்கும் வைக்கப்பட்டுள்ளது. இச்சக்தி 'தன்னிச்சையான' சக்தி. இது காலம் வரும்போது விட்ட குறை தொட்டகுறை கூடிவரும்போது மாயா சக்தியில் அகப்பட்டுள்ள கர்மா தன் பணியை தவறாமல் செய்யும் மாயா சக்தியின் தன்மையினால் மனிதன அனைத்துக் காரியங்களையும் 'தான்' செய்வதாகவே நினைக்கிறான். கர்ம பாரம் குறையக்குறைய மனமாயையின் தன்மையும் தானாகவே மறையும். ஒரு எடை போடும் ராத்தலில் பாரம் குறையக்குறைய ராத்தலின் ஸ்பிரிங்கு உள்ளே சொருகிக்கொள்வதைப் போல, கர்ம பாரமே இல்லாதபோது, மாயை முழுவதும் மறைந்து மற்றொன்று தோன்றும். அதுவேதான்' என்பது மறைந்த நிலை-ஞானத்தின் தொடக்கநிலை. உயிர் உடல் எடுப்பதற்குக் கர்மாவே காரணம் என்றாலும் ரூட நிலையிலேயே கர்மா முழுவதையும் நீக்கி முக்தி நிலையை அடைய முடியும். ஸ்தூல உடல் உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே இந்நிலையை அடைந்தவர்கள் 'ஜீவன் முக்தர்கள்' எனறு சொல்லப்படுவர். இப்படிப்பட்டவர்களுக்கு பிறவி இல்லை. இவர்களைக் காணுவது இறைவனைத் தரிசிப்பது போலாகும். பற்று அற்ற நிலை. இவர்கள் மிகவும் கவனமாக இருந்து தான் செய்யும் எக்காரியத்திலும் புதிய கர்மாதோன்றாமல் நடந்து கொள்வார்கள். இவர்களுக்கு தெய்வ சக்தி துணை நிற்கும். குருவருள் கூடவே இருக்கும். கர்மவினை பலன் தந்ததை எவராலும் எடுக்க முடியாது. கர்ம பலன் இன்றி புதிய பலன வந்து அடையவே முடியாது. நூற்றுக்கணக்கான பிறவிகளில் செய்த பலா பலன்கள் தனியாகவும், கலந்தும் உறுத்தும் வந்து வாட்டுங்கால், வாழ்வில் காணும் நன்மை தீமைகள் ஒரு மாபெரும் மாயை' என்றே தோன்றும். மனம் பக்குவமற்ற நிலையில் நற்பலன்களை தானேதான் சாதித்தது போலவும், தீய பலன்கள் மற்றவர்களால் ஏற்பட்டது போலவும், எண்ணங்கள் உருவாகும். மனம் பக்குவப்பட்ட தெளிந்த சிந்தனை உடைய ஞானிகள் நல்லது கெட்டது அனைத்தையும் ஒன்றாகவே கருதி ஏற்றுக்கொள்வார்கள்.

விதியை வெல்ல முடியுமா என்ற ஒரு சர்ச்சை தொன்று தொட்டு மக்கள் மனத்தில் உண்டு. ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்' என்றார் இளங்கோவடிகள். 'ஊழிற் பெரு வழி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்' என்று சொன்ன திருவள்ளுவர் 'ஊழையும் உப்பக்கங் காண்பர் உழைவு இன்றித் தாழாது உஞற்றுபவர்' என்றார். சிலப்பதிகாரம் ஊழின் வலியை உணர்ந்து எழுதப்பட்ட காவியம். உண்மையில் நடந்த சரித்திரம். வெறும் கட்டுக்கதை அல்ல. மகாபாரதத்தில் சொல்லப்பட்டுள்ள ஒவ்வொரு நிகழ்ச்சிகளுக்கும் ஒவ்வொரு பின்னணி உண்டு என்று கதாபாத்திரங்கள் மூலம் நமக்கு அறிவிக்கப்படுகிறது பல புராணங்களிலும் காவியங்களிலும் சுட்டிக்காட்டப்பட்ட ஒவ்வொரு செயலுக்கும் 'கர்ம சக்தி' என்ற பின்னணி உண்டு. இவைகளைப் படித்தும், கேட்டும் வாழ்வின் நிகழ்ச்சிகளை அனுபவிப்பதின் மூலமாகவும் ஊழ்வினையை வெல்ல முடியாது என்ற கருத்து மிக ஆழமாக மனித மனங்களில் பதிந்துள்ள ஒன்றாகும். ஆனால் 'ஊழையும் உப்பக்கம் காண்பர்' அதாவது ஊழையும் வெற்றி கொள்வர் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். இதனை மனிதன் நம்ப வேண்டும். முடியுமா? என்று கேள்வியை எழுப்ப வேண்டியதில்லை. வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் பாடுபட வேண்டும்.

''இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமல் சொன்னவரை நினையாமல் நினைந்து பவ தொடக்கை வெல்லுவாம்'. குரு தட்சிணாமூர்த்தியை பற்றிய மிக அருமையான மிகமிக ஆழமான கருத்துடைய பாட்டு. குருமார்கள் கண்ணுக்குத் தெரியாமலும் இருக்கலாம். இறைத் தன்மையுடைய குருமார்களும் இறையும் நாம் அவர்களை நினைத்த மாத்திரத்தில் நமக்கு அனுக்கிரகம் பண்ணுவார்சள். 'செங்கோடைக் குமரனெங்கே நுனைக்கினும் அங்கே என் முன் வந்து எதிர் நிற்க வேண்டும்' என்பது அருள் முருகனை வேண்டும் பாட்டு. குரு காயத்திரி மந்திரங்களுக்கு அதிக சக்தி உண்டு. இது சத்தியம், குருவை நாம் நினைத்தாலும், நினைக்கவில்லையென்றாலும் குரு நம்மை மறுப்பதில்லை. நம்முன் இருந்து நிழல்போல் நம்மைத் தொடர்கிறார். இது ஏராளமான பக்தர்களின் அனுபவ உண்மை. அதிபக்தி உள்ளவர்களுக்கும் பல சூழ்நிலைகளில் பிரார்த்தனை பலிப்பதில்லை. ஆனால் பக்தியே

இல்லாதவர் என்று சொல்லப்படும் சிலருக்கு வெற்றிமேல் வெற்றி வரும். குருமார்கள் எதை எப்படி எப்போது கொடுக்க வேண்டும் என்பதை குறித்து வைத்துக்கொண்டிருப்ப வர்கள். பக்தன் கேட்டுத்தான் கொடுக்க வேண்டும் என்று அவசியமே கிடையாது. இறைவனும் அருளுவது அப்படியே. குரு, தன் பக்தனின் ஊழ்வினை வழியே நின்று அவனுக்குப் பலன்களைத் தருவார். மருந்து கசப்பதுபோல் பல நேரங்களில் ஊழ்வினை நுகர்ச்சி கசப்பாகத்தான் இருக்கும். இருப்பினும் ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான். செய்த கர்ம பலனை அனுபவிக்க வேண்டும் என்பது நியதியானால் குருவின் பங்கு என்ன? இறைவனின் பங்கு என்ன? என்று வினவக் கூடும். 'குரு' என்பவரிடம் அனைத்து இறைத் தன்மைகளும் நீக்கமற நிறைவுற உள்ளது. இறைவனே வந்தாலும் 'குரு' சொல்வதைச் செய்யும் படியாக பக்தனுக்கு இறைவன் அருளுவான். பக்தன் கர்ம பலனை அனுபவிக்கும் போது புதிய கருமங்களை அவன் உருவாக்காமல் இருக்க பல வழிகளை குரு காட்டுவார். பரிபாஷையிலோ, அல்லது கனவின் நிலையிலோ அல்லதுநேரடியாக உணர்த்தும் உபாயமான வழிகளின் மூலமோ குரு தன் பக்தனுக்கு வழிகாட்டுவார்.

ஆனால் குரு தன் பக்தனைக் கட்டாயப் படுத்தமாட்டார். பக்தன் செய்யும் கர்மாக்களுக்குத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவும் மாட்டார். பொதுவான மனிதப் பிறவியில் ஒவ்வொருவருக்கும் தனித்து இயங்கக் கூடிய அறிவு சக்தி கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொருவனுடைய ஆன்மீக வளர்ச்சியும் தாழ்வும் இந்த தனித்து இயங்கக் கூடிய அறிவு சக்தியைப் பயன்படுத்தும்-உபயோகப்படுத்தும் பாங்கினைப் பொருத்தே உள்ளது. குருவானவன் சாதாரண நிலையில் சொல்பவைகளையும், கனவு நிலையில் உணர்த்துபவைகளையும் அவர் குறிப்பிடும் சாந்தி சம்பிரதாயங்களையும் துருவித் துருவி புரட்டிப்புரட்டிப் பார்க்க வேண்டும். 'எனக்கு அதிகவேலை உள்ளது குடும்பம் இதனை விரும்பவில்லை. நம்பவில்லை. இதனை இப்படித்தான் செய்ய வேண்டுமா? எனக்கு நேரம் இல்லை' இப்படி எவ்வித குறுக்கு எண்ணங்களும் வந்துவிடக் கூடாது. அப்படி வரும் குறுக்கு எண்ணங்களையே ஊழ்வினைகள் உருத்து வருகிறதாகக் கொள்க. இவ்வாறாக குறுக்கு எண்ணங்கள் அந்தக் குறிப்பிட்ட காலத்தில் நல்லது போலவும் உண்மையானது போலவும், நிலையானது போலவும் தோனறும். ஏன் வலிவு உடையதாகக் கூட தோன்றும். இவை அனைத்தும் வெறும் தோற்றமே. இதனை உணர்ந்து கொள்வது மட்டுமே ஆன்மீக வளர்ச்சிக்கு அடிப்படையாக அமையும். இதற்கு திடமான மனமும், மிகுந்த சகிப்புத்தன்மையும் சுத்தமான, ஆழமான, உண்மையான குருபக்தியும் தேவை. சிறிய சோதனைகளில் சிதறிவிடும் பக்தி பக்தியாகாது. ஆன்மீக வளர்ச்சிக்கு அடித்தளமே அசையாத நிலையில் செய்யப் படும் பூசைகள், பிரார்த்தனைகள், செய்கைகள் அனைத்திலும் பலவிதமான வேற்றுமைகள் காணப்படும். பிரார்த்தனைகள் நிறைவேறாத நிலையில் வெறுப்புணர்ச்சிகளும் சமய சம்பந்தமான காழ்ப்புணர்ச்சிகளும் இது பெரியது, அது பெரிது, இதுதான் உணமை, அது தான் உண்மை என்று மாறுபட்ட பயனற்ற வெட்டி பேச்சுகள் பூசல்கள் இவையே மலிந்திருக்கும். போலி ஆன்மீகமாக உருவெடுத்து மக்களைத் தவறான திசையில் இழுத்துச் செல்லும்.



கர்மசக்தி ஒரு சிக்கலான கோலம் போன்றது. கர்ம சக்தி கோலத்தில் (சிக்கலாக) வந்தால் குரு கோட்டுக்குள் நுழைந்து வருவார் 'எல்லாமாய் அல்லதுமாய்-இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி' பக்தனுக்கு எது தேவையோ அதனை அவனையே செய்யச் சொல்வார்' 'மெய்வருத்தக் கூலி தரும்' இது சத்தியமான உண்மை. அதாவது அவனவன் தானே அனுபவித்துத் தீர்க்க வேண்டும். இதற்கு குருவின் சொல்லை கேட்கவும் சொல்படி நடக்கவும் கற்றுக் கொள்ள வேண்டும். போலி குருமார்கள் மலிந்துள்ள இக்கலிகாலத்தில் மக்களுக்கு பல விதமான கருத்து வேறுபாடுகள் நிலவி வருகிறது. அதிகுழப்பமும் இந்நாளில் உண்டு. வெளியில் தெரிகிற பகட்டு, ஆடம்பரம், விளம்பரம் இவற்றுக்குள்ளேயும், விளம்பரமின்றி உள்ள பல இடங்களிலும் இருக்கும் குருமார்களை அடையாளம் கண்டு அவர்கள் சொற்படி நடப்பதே ஆன்மீக வளர்ச்சிக்கும் ஊழ்வினை கழியவும் வழி வகுக்கும்.

ஒவ்வொரு மகானும், குருவும் தான் கடந்து வந்த பாதையில் தன் பக்தனை நடத்தி வருவார்கள். வழிகள் வேறு வேறு. சேருமிடம் பக்தர்களைச் சேர்க்குமிடம் ஒன்றே. அதுவே 'பூச்சிய' நிலை. நல்ல கர்மாவும், தீயகர்மாவும் இல்லாத நிலை, இதுவே சாந்திநிலை, பரமானந்த நிலை என்று பல்வேறு பெயர்களில் மகான்கள் தாங்கள் அனுபவித்தவாறு கூறியுள்ளனர்.

பக்தன் தன் குரு சொற்படி நடந்து கடமைகளைச் செய்து வந்தால் பல பிறவி களைக் கடந்து தான் குவித்து வைத்துள்ள மலை போன்ற கர்மா தீருவதைப் பொருத்து பூச்சிய நிலையை அடையலாம். எண்ணம் சொல்-செயல் மூன்றும் தூய்மையாக இருந்து, தான் செய்யும் காரியங்களில் வரும் பலன் அனைத்தையும் முழுமையாகவும் சுத்தமாகவும் குருவுக்கு அர்ப்பணிக்க வேண்டும். இதற்கு குருவைத் தேடி அலைய வேண்டியது இல்லை. கால நேரம் வரும்போது, விட்ட குறை தொட்ட குறை கூடி வரும்போது குருவானவர் வலியவந்து ஆட்கொள்வார்.

கர்மா கழிய செலவிடும் பணம் நல்ல வழி யில் சம்பாதித்ததாகவும் எந்த பிரதிபலனை யும் எதிர்பார்க்காமலும், ஆடம்பரம் விளம் பரம் எதுவும் இல்லாமலும் இருந்து, காரியத் தின் பலன் முழுவதையும் குருவின் திருவடிக்குச் சமர்ப்பித்துவிட வேண்டும். அவர் அதனை பக்தனிடும் பிச்சையாக ஏற்றுக் கொண்டு அருள் பிச்சையிடுவார். 'நான் எடுப்பதும் பிச்சை, நான் கொடுப்பதும் பிச்சை' என்பார் குரு. நூறு ஜென்மங்கள் எடுத்து அனுபவித்துக் கழிக்க வேண்டிய கர்மாக்களை ஒரு சிறிய 'தீபம்' ஏற்றி கழித்துவிட முடியும் என்பார் குரு. 'தீபம்' ஏற்றுதலில் காலம், இடம், பொருள், ஏவல், மந்திர, தந்திர சாஸ்திர சம்பிரதாயங்கள் மற்றும் பல நிலைகளிலும் கவனிக்க வேண்டிய உண்மைகள் பல உண்டு. எதில் பிழை நேர்ந்தாலும் பிழைதான். மொத்தமாக எல்லாம் போய்விடும். அது மட்டுமல்ல மாறாக எதிர்வினை தோன்றும். குளிக்கப்போய் சேறு பூசிக் கொண்டது போல் செய்கின்ற வேள்விகள், பூசைகள், தர்மங்கள், ஓதுகிற மந்திரங்கள் இவைகளுக்கு தற்காலத் தில் பல இடத்தில் பலன் கிடைக்காது போவ தற்குக் காரணங்கள் உண்டு. பொருள் சுத்த மாக, காலநேரம், தகுதி, மந்திர சக்தியுடன் பிறரை வருத்தி ஈட்டாத பொருளைக்கொண்டு சாம குரோத, ஆணவம் நீக்கி, விளம்பரம் ஏதும் இன்றி அன்பு, தியாகம், உழைப்பின் அடிப்படையில் அடக்கத்துடன் சோர்வு இன்றி உண்மை பக்தியுடன் குரு சொல்படி பூசைகளை செய்ய வேண்டும். அப்போது காரியம் வெற்றி கிட்டும்.

கந்தர் சஷ்டிக்கும், ஐயப்பன் சபரிமலைக் குச் செல்லும் காலங்களில் விரதம் இருப்பதை காண்கிறோம். விரதம் இருப்பவர்கள் முகத் தில் சோர்வு தென்படக்கூடாது. 'நான் விரதம் இருக்கிறேன்' பசிக்கிறது. ஆனால் சாப்பிடுவ தில்லை. உடல் தளர்ச்சியாக உள்ளது என்று புலம்புவதும் வேறுவிதமான பகட்டு எதுவும் செய்யக்கூடாது. விரதம் இருப்பவர்களைப் பார்த்து கேலி பேசுவது கூடாது. ஆ! உன் முகம் வாடி, உடம்பு தளர்ந்துள்ளதே, இதைக் குடி, அதைச் சாப்பிடு. விரதத்தை சீக்கிரம் முடி என்ற வெட்டிப் பேச்சுகள் எதுவும் பேசக் கூடாது. அவரவர்க்கு வாய்ந்த குரு சொல் படி நடக்க வேண்டும் (ரூபமுள்ள குருவாகவும் அரூபமான நிலையிலும் குரு இருக்கக்கூடும்) இல்லையேல் விரதத்தினால் உண்டாகும்பலன் கிடைக்காது. விரத காலத்தில் தவறுகள் செய் தால் தகுந்த தண்டனை கிடைக்கும். அதாவது கொடிய கர்மாக்கள்-தீட்டு உருவாகும்.

ஒரு பெண்ணை மணம் முடிக்க வர தட்சிணை கேட்டல்-கொடுத்தல் இதில் சம் பந்தப்பட்டவர்களின் குடும்பம் காலக்கிரமத் தில் அழியும். வரதட்சிணையை ஒரு சமூகமே ஆதரித்தால் அச்சமூகமும் அழியும். ஏராள மாக உதாரணம் கொடுக்கலாம். ஆனால் அப்படிச் செய்யத் தேவையில்லை என்று கருதிவிடப்படுகிறது.

ஒரு குடும்பத்தில் மறைந்த பெரியவர் களுக்கு செய்ய வேண்டிய ஈமக்கடன்களைக் குறைவின்றிச் செய்தால் அப்பெரியவர் ஆத்மா சாந்தி பெறுவதோடு அவர்கள் தெய்வமாக இருந்து தன் வழி வந்தோரைக் காப்பாற்று வார்கள். அவர்கள் யாராவது ஜீவன் முகதர் களாகவோ மகான்களாகவோ இருந்து விட் டால் அவர்கள் வழங்கும் ஆசியில் அக்குடும் பம் பல வழியிலும், செழித்து புகழோடுஓங்கி விளங்கும். உழைப்பு தியாகம் ஆழ்ந்த பக்தி இவற்றின் அடிப்படையில் தங்களுக்கு கொடுக் கப்பட்ட அரிய பெரிய கடுமையான சோதனை களில் வென்றவர்கள் நாம் வழிபடும் நாயன் மார்கள். ஆழ்வார்களும் அப்படியே. அவர் களுக்கு ஏற்பட்ட சோதனைகளை இன்று நாம் நினைத்துப்பார்க்கக்கூட முடியாது. இவர்கள் அனைவரும் தம் குருவழி நடந்தவர்கள். வினையை வென்றவர்கள். தியாகச்சுடர்கள் தன் நிகரற்ற பக்திமான்கள்.

---





**திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயத் தில் பணிக்காலத்தில் இறந்து போன பணியாளரின் வாரிசு தாரருக்கு பணிநியமன உத்தர வினை மாண்புமிகு அறநிலை யத்துறை அமைச்சர் புலவர் செங்குட்டுவன் அவர்கள் வழங்கினார்கள்.**



# ஆன்மீக அதிசயங்கள்

பேராசிரியர் டாக்டர் டி. செல்வராஜ்

கோயில்களில் எத்தனையோ அபூர்வமான சிற்பங்கள் காணப்படுகின்றன அதிசயமான நிகழ்ச்சிகள் பல தலங்களில் நிகழ்கின்றன. அதிசயமான நிகழ்ச்சிகள் பல தலங்களில் நிகழ்கின்றன. அறிவுக்கு அப்பாற்பட்ட அந்த அதிசய நிகழ்சசிகளுக்கு அறிவியல் விளக்கங்களைக் கொடுக்க முயல்வது வீண்வேலை. ஆன்மீக நெறியில் அவை ஆண்டவன் அருளால் நடைபெறுகின்றன என்று கருதி மன நிறைவு கொள்ள முடியும். ஆன்மீகத்தில் பலப்பல அதிசயங்கள் நாளும் நடக்கின்றன. எதை எழுதுவது! எதை விடுவது? இருப்பினும் ஆன்மீக அதிசயங்களில் தேர்ந்த அய்ம்பதை இனித் தொகுத்துக் காணலாம்.

1. இருநிறப்பிள்ளையார் : தக்கலைக்கு (குமரி) அருகிலுள்ள கேரளபுரத்தில், மகாதேவர் கோயிலில், அரசமரத்தடியில் ஒரு பிள்ளையார் சிலை உள்ளது. இது ஆவணி முதல் ஆறு மாதம் வெள்ளையாகவும் மாசி முதல் ஆறு மாதம் கருப்பாகவும் மாறி விளங்குவது ஓர் அதிசயம்.

2. தேன் உறிஞ்சு பிள்ளையார் : (1) திருவலஞ்சுழி வெள்ளைப்பிள்ளையார் சிலை, கடல் நுரையால் செய்யப்பட்டது. (2) திருப்புறம்பயம், சாட்சி நாதர் கோயிலில் இருக்கும் பிள்ளையார் சிலையும் கடல்நுரை, கிளிஞ்சல், நத்தைக்கூடு முதலிய பொருள்களால் ஆனது. இதற்குத் தேன் அபிடேகம் செய்யப்படும்போது, இது தேனை உறிஞ்சிக் குடித்து விடுகிறது.

3. நீர் உறிஞ்சு பிள்ளையார்: சீர்காழிக் கருகில், திருமணிக்கூடம் என்ற வைணவத் தலத்தில் 'நாலாயிரத்தொரு விநாயகர்' வீற்றிருக்கிறார். இவருக்குச் செய்யும் அபிடேக நீர் இவரது சிகைக்குள் சென்றுவிடுவதாக மக்கள் நம்புகின்றனர்.

4. விநாயகி: விநாயகரின் சக்தி வடிவம்—பெண்ணாக விளங்கும் வடிவம்—விநாயகி. மதுரை சுசீந்திரம் சிதம்பரம் பவானி திருச்செந்தூர் கோயில்களிலும், வாசுதேவநல்லூர்த் தேரிலும் அருமையான இந்த வடிவம் காணப்படுகிறது.

5. சிவனின் கிடந்த கோலம்: ஊத்துக்கோட்டைக்கு அருகில் சுருட்டப்பள்ளி என்ற கிராமம் இருக்கிறது. சிவன் கோயிலில் சிவன் கிடந்த கோலத்தில் இருக்கிறார். கிடந்த கோலத்தில் இருக்கும் சிவன் சிலை வேறு எங்கும் இல்லை.

6. கழுகுகளின் தரிசனம் : திருக்கழுக்குன்ற வேதகிரி மலையை இரண்டு கழுகுகள் வலம் வந்து இறைவனை வழிபடுகின்றன. இந் நிகழ்ச்சி பல நூற்றாண்டுகளாக நிகழ்கின்றது. அஃறிணை உயிரினம் இறைவனை வழிபடுவதை நேரில் தரிசிக்கக்கூடிய ஒரே தலம்—அக் கழுகுகளின் பெயரால் வழங்கும்—திருக்கழுக்குன்றம்.

7. சங்கின் தோற்றம் : திருக்கழுக்குன்றத்தின் தென் கிழக்கு மூலையில் இருப்பது சங்கு தீர்த்தம். இதில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை சங்கு பிறக்கிறது. அப்படித் தோன்றிய சங்குகள் சில, கோயிலில் வைக்கப்பட்டுள்ளன.

8. அத்தி வரதர் : காஞ்சி வைகுண்டப் பெருமாள் கோயிலின் திருக்குளத்தில் நீராழி மண்டபத்தின் அடித்தளத்தில் ஒரு மாடத்தில் அத்தி மரத்தாலான அத்திவரதர் சயனித்திருக்கிறார். நாற்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை இவரை வெளியே எடுப்பார்கள்: ஒரு மண்டலம் பூசிப்பார்கள்; மீண்டும் அதே மாடத்தில் வைத்துவிடுவார்கள்.

9. கருடன் : 1. காசி எல்லைகளில் கருடன் பறப்பதில்லை. 2. கோயில்களில் கும்பாபிடேகம் நடைபெறும்போது கருடன் கோயில்களை வலம் வருவது பல தலங்களில் நடைபெற்றுள்ளது. 3. பந்தளத்திலிருந்து சபரி மலைக்கு ஐயப்பனுக்காக ஆபரணப் பெட்டி கொண்டு செல்லப்படும்போது மேலே வானில் கருடன் வலம் வருகிறது.

10. பால் நிறம் : சீர்காழிக்கு அருகில் திருக்குருகாவூர் கோயிலின் தீர்த்தம் 'பால் கிணறு' தை அமாவாசையன்று இறைவர் தீர்த்தமாகக் கொடுக்கும்போது கிணற்று நீர் பால் நிறமாக மாறிவிடுகிறது.

11. விளக்கு : (1) திருக்காளத்தி(வாயுத் தலம்) சிவன் கோயிலின் கருவறை விளக்குச் சுடர் காற்றால் தாக்கப்பட்டதுபோல எப்போதும் அசைந்துகொண்டே இருக்கும். (2) மோகனூர் சிவன் கோயிலின் கருவறை விளக்குச் சுடர் எவ்வளவு காற்றடித்தாலும் எப்போதும் அசையாது எரியும். இறைவனது பெயர் அசலதீபேசுவரர். அசலதீபம்-ஆடாத விளக்குச்சுடர் (3) வேதாரண்ய விளக்கழகு' என்பது ஒரு புதுமொழி (4) எட்டாமனூர் மகாதேவர் கோயிலின் பழைய விளக்கில் ஒரே நேரத்தில் மூன்று கிலோ எண்ணெய் வார்க்கலாம். அவ்வளவு பெரியது.

12. கோடிலிங்கம் : ஒரே லிங்கத்தில் ஆயிரம் சிறுசிறு லிங்கங்கள் செதுக்கப்பட்டிருப்பது சகஸ்ரலிங்கம். திருவிரிஞ்சை திருக்காளத்தி திருவலம் முதலிய பல தலங்களில் இத்தகைய லிங்கங்கள் உள்ளன. திருக்கொட்டையூரில் ஒரே லிங்கத்தில் கோடி லிங்கங்கள் இருக்கின்றன. இறைவனது திருப்பெயர் 'கோடீஸ்வரர்'.

13. மஞ்சள் நிறமாகும் துணி: வள்ளி மலையின் ஒரு பகுதியில் வள்ளி, மஞ்சள் அரைத்த கல் இருக்கிறது. அதன் அருகிலுள்ள சுனையில் ஒரு வெள்ளை நிறத்துணியை நனைத்து அக்கல்லில் தேய்த்தால் துணி மஞ்சளாகிறது.

14. முளை விடும் வறுத்த பயிறு: மகப்பேறில்லாத மகளிர், மடியில் வறுத்த பயற்றை கட்டிக்கொண்டு, திருப்புட்குழி (வறுத்த பயறு முளைக்கும்) மரகதவல்லித் தாயார் சந்நிதியில் படுக்க வேண்டும். மகப்பேறு கிடைக்குமானால் அந்த வறுத்த பயறு முளைவிட்டிருக்குமாம்.

15. மீன்கள் : (1) சென்னை கந்தக் கோட்டம் திருப்பரங்குன்றம் பாபநாசம் முதலான தல தீர்த்தக்குளங்கள் பலவற்றில், பல வகைப்பட்ட மீன்கள் ஏராளமாக இருக்கக் காணலாம். ஆனால், பார்த்தசாரதிக்கோயில் திருக்குளத்திலும், மதுரை பொற்றாமரைக் குளத்திலும், மீன்களும் மற்ற நீர்வாழ் உயிரினங்களும் வளர்வதே இல்லை. (2) கொல்லி மலை அறப்பளீசுரர் கோயிலின் குளத்திலுள்ள மீன்களுக்கும் பாபநாசத்தின் படித்துறையிலுள்ள மீன்களுக்கும் 'மூக்குத்தி' போடுவதாக நேர்ந்துகொண்டால் நினைப்பன நிறைவேறுமாம. (3) வைத்திஸ்வரன் கோயில் திருக்குளத்திலும் நீர்வாழ் உயிரினங்கள் வளர்வதில்லை.

16. இருநிறம் : கூவம்-திரிபுராந்தகர் - பெருமழை வருவதாக இருந்தால் சுவாமிமேல் வெண்ணிறம் படரும்; சண்டை வருவதாக இருந்தால் பொன்னிறம் படரும்.

17. சூரியன் வழிபடுதல் : திருக்கோயிலின் மூலவர் மீது, குறிப்பிட்ட நாட்களில் சூரியனின் கதிர்கள் படிந்து அலங்கரிப்பது சூரிய வழிபாடு. இவ்வழிபாடு நடக்கும் திருக்கோயில்கள் சிலவும், நாள்களும் வருமாறு:

1. பனையபுரம்—சித்திரை 1-7.

2. ஸ்ரீவைகுண்டம்—சித்திரை 6; ஐப்பசி 6

3. ரத்னகிரி—வைகாசி விசாகம்: மாசி சிவராத்திரி.

4. திருப்பனந்தாள்—ஆவணி; மாசி

5. திருக்கண்டியூர்—மாசி 13-15.

6. தாரமங்கலம்—மாசி 8, 9 10; ஆவணி 8, 9 10

7. திருப்பராய்த்துறை—புரட்டாசி 18

8. திருவாஞ்சியம்—புரட்டாசி 6-9; பங்குனி 6-9.

9. திருவேதிக்குடி—பங்குனி 13-15

10. திருநெல்லிக்கா—மாசி 18-24

11. தாயுமானவர் கோயில் (திருச்சி)— பங்குனி 23-25

12. குருந்தமலை—மாசி 21-23

13. கும்பகோணம் நாகேசுவரர் கோயில்— சித்திரை 11 12, 13 திங்களூர்: இங்குப் பங்குனி உத்தரத்தன்று. காலை ஆறு மணிக்குச் சூரியன் கதிர்களும், மறுநாள் மாலை 6.30 மணிக்குச் சந்திரன் கதிர்களும் லிங்கத்தில் படிகின்றன. இருவர் வழிபாடும் இங்கு நடைபெறுவது ஒரு சிறப்பியல்பு.

18. சிரிக்கும் சிலை : பவானி திருக் கோயிலில் ஒரு பெண்ணின் சிலை உள்ளது. அதன் தலைமேல் தண்ணீரை ஊற்றினால் அச்சிலையில் சிரிக்கும் பாவனை கூடுதல் கவர்ச்சியாக விளங்குகிறது.

19. திருப்புளியாழ்வார்—புளிக்காத புளி: 1. ஆழ்வார் திருநகரில் ஒரு புளிய மரத்தின் பொந்தில் நம்மாழ்வார் பல ஆண்டுகள் யோக நிலையில் ஆழ்ந்திருந்தார். பல நூற்

றாண்டுகள் கடந்தாலும், இம்மரம் இன்றும் உள்ளது. இதனைத் 'திருப்புளியாழ்வார்' என வழங்குவார்கள். சாதாரணமாகப் புளிய மரங்களில் இலைகள் இரவில் கூம்பும். இம் மரத்தில் இலைகள் கூம்புவதில்லை. ஆகவே, இதனை 'உறங்காப்புளி' என்பர் 2. குட்டம் (நெல்லை) ஆனந்தவல்லி ஆலயத்தின் முன் பாக இருக்கும் புளிய மரமும் உறங்காப்புளி தான். மேலும் இது 'புளிக்காத புளி'; இதன் இலைகள் புளிப்பதில்லை.

20. நிவேதனம் : 1. திருவிண்ணகர் ஒப்பிலியப்பன (ஒப்பற்றவன்) வலக்கையில் 'மாம் ஏகம் சரணம் வீரஜ்', 'நான் ஒருவனே உனக்குக்கதி. என்னைச் சரணடைந்தால் வினைகள் தீரும்.'' [பகவத் கீதை) என்ற பகுதி வைரத்தால் இழைக்கப்பட்டுள்ளது. உப்பில்லாத பொருள்கள் இவருக்குப் படைக்கப்படுவதால்- இவர் 'உப்பிலியப்பன்' என்று பெயர் பெற்றார். 2. விராலிமலை முருகனுக்கு இரவுக்காலப் பூசைக்குரிய நைவேத்தியம்- சுருட்டு. 3. திருக்குற்றால நாதருக்கும், குழல் வாய்மொழிக்கும் வற்றாத அருவி ஒலியால் மாறாத தலைவலி ஏற்படுகிறதாம். ஆகவே, இவர்களுக்குச் சுக்கு, மிளகினால் ஆன கஷாய நைவேத்தியம் செய்யப்படுகிறது. 4. டில்லி பாதுஷாவின் மகள் துலுக்க நாச்சியார் ஸ்ரீரங்கநாதரின ஒரு மனைவி ஆவார். இவருக்குக் கோவிலில் தனிச்சந்நிதியும் இருக்கிறது. மாப்பிள்ளை ஸ்ரீரங்கனுக்கு ரொட்டியும் வெண்ணெயும் நிவேதனமாகப் படைக்க மாமனார் டில்லி பாதுஷா கொறநாட்டில் இரண்டு கிராமங்களைக் கொடுத்துள்ளார்.

21. பட்டாடையும், பாவாடையும் : 1. திருவானைக்கா, அகிலாண்டேசுவரி ஆலயத்தில் அம்மனின் பட்டாடையை அணிந்த குருக்கள் இறைவனுக்குப் பூசை செய்கிறார். 2 திருநெல்வேலியில், குருக்கள் அம்மனின் பாவாடையைப் புனைந்து இறைவனின் சந்நிதிக்குச் சென்று அர்ச்சனை செய்கிறார்.

22. அபிடேகம் : 1. ரத்னகிரி மலை மீதுள்ள இறைவனுக்கு அபிடேகம் செய்யும் பால் சிறிது நேரத்தில் தயிராக மாறுகிறது. 2. சென்னிமலை முருகனுக்கு உகந்த அபிடேகப் பொருள் தயிர். இங்குத்தயிர் புளிப்பதில்லை. 3. நாகேச்சுரம் நாகராசன் மீது அபிடேகம் செய்யப்படும் பால்நீலநிறமாகிறது. 4. திருநீலக்குடி லிங்கத்திற்கு நல்லெண்ணெய் அபிடேகம் செய்தால் பாதி உறிஞ்சப்படுகிறது. 5. திருந்து தேவன்குடி-இது நண்டு பூசித்ததலம். ஒரு நிறப்பசுவின் பால் பத்துக் கலம் லிங்கத்தின் மேல் அபிடேகம் செய்தால் ஒரு பொன்னிற நண்டு ஊர்ந்துபோவது போலத் தோன்றுமாம்.

23. இசைத் தூண்களும், கல் நாதசுவரமும்: 1. தட்டினால் ஏழிசைகளைத் தரும் இசைத்தூண்கள் சுசீந்திரம், மதுரை, திருநெல்வேலி, தென்காசி, திருவனந்தபுரம்முதலிய தலங்களில் இருக்கின்றன. பூசை நேரத்தில் இவை முன்னர் வாசிக்கப்பட்டன. 2. இசைத் தூண்களுடன், கல்நாதசுவரமும் ஆழ்வார் திருநகரியில் உள்ளது. பல ஆண்டுகளுக்கு முன் பூசை நேரத்தில் கல் நாதசுவரம் வாசிக்கப்பட்டதாம்.

24. தஞ்சைப் பெருங்கோயில் : 1. இது தோற்றத்தில் மிகப் பெரிய கம்பீரமான கோயில். இதில் பெரிய லிங்கமும், நந்தியும் உள்ளன. கலசத்தின் நிழல் நிலத்தில் படிவதில்லை 2 கோபுரத்தின் தெற்கில் ஐரோப்பியன் சிலை ஒன்று தொப்பி அணிந்த தலையுடன் இருக்கிறது. ஐரோப்பியன் சிலை கோபுரத்தில் இருப்பதும் ஓர் அதிசயந்தானே!

25. வியர்வைத் துளிகள்: சிக்கல் சிங்காரவேலர் வேல்நெடுங்கண்ணியிடம் சூரசம்காரத்திற்காக வேல்வாங்கும் ஐதிகக் காட்சி நடைபெறும்போது. வியர்வைத் துளிகள் தோன்றுகின்றன.

26. ஜோதி: திருவல்லம் (திருவலம்) அருகிலுள்ள கஞ்சன் கிரியைச் சேர்ந்த லிங்கங்கள்ல் ஒவ்வொரு பௌர்ணமியிலும், (குறிப்பாதை சித்திரை மாதப் பௌர்ணமிகளில்) ஒரு பிரகாசமான ஜோதி தோன்றுகின்றதாம்.

27. ஒலிகள் : 1. திருக்காட்டுப்பள்ளி தட்சிணாமூர்த்தி சந்நிதிக்கு மேற்கில், மதிற் சுவரில், கடல் ஒலி போன்ற ஒலி கேட்கிறது. 2. திருவரங்கத் திருக்கோயிலில் குறிப்பிட்ட ஒரு பகுதியில், 'ரங்கா' என்று ஒலி எழுப்பினால்,அடுக்கிய எதிரொலிகள் தொடர்ந்துஒலிக்கின்றன. 3. பிருங்கி முனிவர் வண்டு வடிவெடுத்து இறைவனைத் திருவெண்டுறையில் வழிபட்டார். கோயிலின் கருவறையில் இன்றும் வண்டின் ரீங்காரத்தைக் கேட்க முடிகிறது. 4. திருவையாறப்பன் கோயிலில், குறித்த ஓரிடத்தில் நின்று 'ஐயாறா' என்று ஒருமுறை அழைத்தால், ஏழு முறை எதிரொலிக்கிறது.

28. பேரில்லாத்தல விருட்சம்: மதுரை மாவட்டம், திருக்கொடுங்குன்றம், மங்கை நாதர் கோயிலுக்கு அடுத்து, மலைப்பாறையில் ஒரு தல விருட்சம் உள்ளது. இது எந்த மர வகையைச் சார்ந்தது என்பது எவருக்கும் தெரியவில்லை. பேரில்லா மரம், இந்தத் தலத்தின் மற்றொரு தலவிருட்சம் 'மங்காப் புளி'.

29. அதிசயமான தலவிருட்சங்கள் சில: 1 ஏறிழிஞ்சி: பொன்னேரி சின்னக்காவணம் சிவன் கோயிலின் தல விருட்சம். ஏறு இழிஞ்சி ஏறிழிஞ்சி, கீழே விழுந்த கனிகள், மீண்டும் தாய்மரத்தில் ஏறி ஒட்டிக்கொள்கின்றன. 2. தில்லை-சிதம்பரத்தின் தலவிருட்சம். இது வெய்யிலில் குளிர்ச்சியும், குளிர்ச்சியில் வெப்பமும் தருமாம். 3. மாமரம்: காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயிலில் ஒரு மாமரம் உள்ளது. இது ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையானது. இதற்கு நான்கு கிளைகள் உள்ளன. இவை தரும் கனிகளின் சுவைகளும் வெவ்வேறு

வகைப்பட்டிருப்பது ஓர் அதிசயமாகும். 4. பிறவாப்புளி. பேரூர் பட்டீஸ்வரர் கோயில் மரமான இதன் விதைகள் எப்போதும் முளை விடுவதில்லை. ஆகவே, இது 'பிறவாப்புளி' எனப் பெயர் பெற்றது. இதே கோயிலின் வடக்கே உள்ள பனை மரத்திற்கு 'இறவாப் பனை' என்பது பெயர். இது சாகா வரம் பெற்ற மரமாம். பட்டீஸ்வரரைச் சரண் அடைந்தவர்களுக்குப் பிறவாப்புளிபோல பிறப்பும் இல்லை; ஆகவே, இறவாப்பனை போல இறப்பும் இல்லை. 5. பழமுதிர்சோலை யின் தல விருட்சம் நாவல் மரம். நாவற்பழம் விநாயகருக்குப் பிடித்தமானது. மற்ற நாவல் மரங்கள் விநாயகர் சதுர்த்தியின்போது (ஆவணி) பழுக்கும். ஆனால், இந்த மரமோ கந்தர்சஷ்டியின்போது (கார்த்திகை) பழுக்கும்.

30. தேன்கூடு : திருச்சிற்றேமக்கோயில் சந்நிதியில் தேன்கூடு இருக்கிறது. இங்குச் சித்தர்கள் தேனீக்களாக வந்து வழிபட் டார்கள் ஊன்பது நம்பிக்கை. இந்தத்தலத் தில் தேன் கூட்டிற்கும் நாள் பூசை நடை பெறுகிறது.

31. திசை மயக்கம் : காஞ்சி காமாட்சி கோயிலுக்குள் சென்றுவிட்டால் திசைகளை அறிய முடியாது. திசை மயக்கம் ஏற்படும். மயக்கமும் குழப்பமும் ஏற்படுகின்றபடி வடிவமைத்துக் கட்டப்பட்ட ஒரே கோயில் இது. ஆனாலும் காசிவிசுவ நாதர் சந்நிதி கிழக்கு நோக்கி இருப்பதால், திசைகளை ஒருவாறு சிந்தித்து அறியலாம்.

32. எமனும், சித்திரனும் : 1. ஸ்ரீவாஞ்சி யில் எமனுக்கு ஒரு தனிச் சந்நிதி இருக்கிறது. இவன் வாஞ்சிநாதருக்கு ஒரு வாகனம் 2 இவ னுடைய கணக்கன் சித்திரனுக்குக் காஞ்சியில் ஒரு கோயில் இருக்கிறது.

33. மகாமகக்குளம் : இது கும்பகோ ணத்தில் உள்ளது. சூரியன் கும்பராசியிலும், குரு சிம்மராசி மக நட்சத்திரத்திலும் பொருந் தச் சந்திரன் பூரணமாய் நிறைவும் நாளே மகாமகம். இது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழ்வது. இந்த நல்ல நாளில் கங்கை முதலான ஒன்பது தீர்த்தங்கள் மகா மகக் குளத்தில் ஒருங்கே கலக்கின்றன எனக் கருதுவர். அன்று அக்குளத்தில் முழ்குவது பாவங்களைப் போக்கடிக்கும்.

34. நாழிக்கிணறும் காணாச்சுனையும்: 1. திருச்செந்தூர் கந்த புஷ்கரணி தீர்த்தம் ஒரு சதுர அடி பரப்புடையது. இதில் எவ் வளவு நீர் எடுத்தாலும் வற்றுவதில்லை. நீர் மட்டம் குறைவதும் இல்லை. இது கடலுக்கு மிக அருகில் இருந்தாலும் இந்த நாழிக்கிணற் றின் தீர்த்தம் இனிக்கிறது; நோய் தீர்க்கும் மருத்துவக் குணமுடையது. 2. குருந்த மலை யில் இருக்கிறது சிறு பொந்து போன்ற ஒரு சுனை. குறுகிய பாத்திரம் கொண்டு எவ்வளவு நீர் வேண்டுமானாலும் முகக்கலாம். சுனை



நீரின் அளவு குறையாது; அளவும் தெரியாது' பரப்பும் தெரியாது. ஆகவே. இது காணாச் சுனை எனப்படுகிறது.

35. தாரமங்கலச்சிவன் கோயில் : இது அதிசயமான சிற்பங்களின் கருவூலத்தலம் ; சேலத்துக்கருகில் உள்ளது. கோயிலில் இராமன் வாலியின் சிலைகள் மிகப்புகழ் பெற்றவை. ஒரு தூணில் விளங்கும் இராமனின் சிலையின் பக்கத்திலிருந்து மற்றொரு தூணில் இருக்கும் வாலியைப் பார்க்கலாம். ஆனால் வாலியின் பக்கத்திலிருந்து இராமனைப் பார்க்கவே முடியாது. இது சிற்பக்காட்சி. இராமாயணம் காட்டும் இலக்கியக் காட்சியும் இதுதான். அதிசயமான வேறு சிலசிலைகள் வருமாறு : 1. ரதி மன்மதன். 2. ஒரே கல் லால் அமைந்த விதானம் 3. விதானத்தில் சுழலும் கிளி வட்டம். 4. யாளிகளின் வாயில் சுழலும் மூன்று பழங்கள் 5. பெண் பாவையின் கூரிய நகம். 6. சுதை இல்லாமல் ஒன்பதே பாறைகளால் இணைத்துக் கட்டப்பட்ட விநாயகர் கோயில் 7. மறைவாக இருக்கும் நிலவறை முதலியன.

36. அருமையான கலைச்செல்வங்கள்: பழங்கால முதல் மிகவும் அருமையான பொருள்களாகக் கருதப்பட்டவை சில வரு மாறு : 1. திருவீழிமிழலை-மண்டபம் 2 தாழக்கொம்பு-பல சிற்பங்கள் 3. திருவலஞ் சுழி-பழ யாளி 4. ஆவுடையார் கோயில்-கொடுங்கை 5. திருவாரூர்-தேர்; குளம் 6. வேதாரண்யம்-விளக்கு 7. மன்னார்குடி, திரு விரிஞ்சை-மதில் 8. திருவரங்கப்-சோபுரம் 9. 9. திருவிடை மருதூர்-தெரு. 10. பாபநாசம்-படிகள்.

37. இடி பூசை : இந்திரன் இறைவனை இடியின் மூலம் வழிபடுவது இடி பூசை. திருக் கழுக்குன்றத்திலும், வாட்போக்கியிலும் (ரத்னகிரி) பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இடி பூசை நிகழ்கினறது. கோயிலை இடிதாக்கும். ஆனால் மூல விக்கிரகம் சேதம் அடையாது.

(இதன் தொடர்ச்சி 43-ஆம் பக்கம்)

# வௌரஸ்நான தீர்த்தபுரம்

அ. அங்கிடிசாமி, எம்.ஏ., பி.காம்.,

**குற்றம் பொறுத்தவர் :**

ஓங்கார நாதமும் நான்கான வேதமும் ஆனவன் ஈசன்; மோன நிலையில் ஞானம் சொன்னவன் ஈசன். ஆலகாலம் உண்ட நீல கண்டன அவன்; அவல் இடுக்கண்களையும் முக்சண் முதல்வன். அவன் அண்டர்நாயகன் தொண்டர் தாயவன். அவன் கோயில் கொண்ட தலங்கள் ஆயிரமாயிரம். அவற்றுள் ஆடுதுறை என்னும் திவ்விய தலம் அண்ணலின் அருள் சுரக்கும் புண்ய தலம் ஆகும். அழுது தொழும் அடியவர் தம் பாவத்தைக் கழுவிக் காக்கும் கண்கண்ட தெய்வமாக 'குற்றம் பொறுத்தவர்' என்னும் நாமத்துடன் ஆடு துறையில் அவன் எழுந்தருளியுள்ளான்.

**இருப்பிடம் :**

பொன்னி நதியினும் புண்ணிய நதியாம் நீவா நதியின்கண் அமைந்துள்ளது ஆடுதுறை; தொழுதூர் திட்டக்குடிசாலையில் ஆக்கனூருக்கு தெற்கே அரை மைல் தொலைவிலும் பெண்ணாடம் புகை வண்டி நிலையத்திலிருந்து 12 மைல் மேற்கேயும் தேவாரம் பெற்ற திருநெல்வாயில் அரந்துறைக்கு அருகாண்மையிலும் சு. ஆடுதுறை அமைந்துள்ளது. இத்தலம் புராணத்தில் மதுவனம் என வழங்கப்பட்டுள்ளது. சீதையைத் தேடிக் கண்டு வந்த வானரங்கள் குடித்து கும்மாளமிட்ட இடமாகும் இது. அருகாமையில் உள்ள வாலிகண்டபுரம் இக்கதைக்கு வலுவூட்டுவதாக உள்ளது.

**ஊரும் பேரும்:**

இவ்வூர் இனாம் கிராமமாக இக்கோயிலுக்கு வழங்கப்பட்டதால் சுரோத்ரியம் (இனாம்) ஆடுதுறை எனவும் சுவேதகேது முனிவர் சிவலிங்க பிரதிஷ்டை செய்து, பாவம் நீங்கப் பெற்றதால் சுவேத கேது ஆடுதுறை எனவும், சுக்ரீவன் வழிபட்டதால் சுக்ரீவன் ஆடுதுறை எனவும் சுருக்கமாக சு. ஆடுதுறை எனவும் அழைக்கப்படுகிறது. வடகரை முடி கொண்ட சோழ வள நாட்டில் உகளூர் (ஒகளூர்) கூற்றம் என்னும் நாட்டுப் பிரிவில் உள்ளதாக வரலாறு கூறுகிறது. இறைவன் அபராத ரட்சகர், குற்றம் பொறுத்தவர், குற்றம் பொறுத்தருளிய நாயனார், அபராத ரட்சமேஸ்வரர், குரங்காடுதுறையுடைய மகாதேவன் எனவும். இறைவி சுகந்த குந்தலாம்பிகை, ஏலவார் குழலியம்மை எழில்வார் குழலியம்மை என்றும் வழங்கப்படுகிறார்.



**நிவாநதி :**

வடவெள்ளாற்றின் தென் கரையில், சப்த தலங்களில் நான்காவது தலமாக நடு நாயகமாய் இத்தலம் அமைந்துள்ளது. அழகிய நதிக்கரையில் அமைந்த தலம் ஆடுதுறை ஆகும். சுவேத முனிவர் நீராடியமையால் சுவேத நதி எனவும், சுவேதம் என்பது வெண்மையைக் குறிப்பதால் வெள்ளாறு எனவும் அழைக்கப்படுகிறது. தல வழிபாட்

டிற்கு தீர்த்தம் வேண்டி நதியொன்றை உருவாக்கி 'நீ, வா?' என்று சொன்னார் வசிட்டர். அதனால் இந்நதி நிவா நதி என பெயர் பெற்றது. இந்நதியை சம்பந்தர்,

'கந்தமா மலருந்திக் கடும் புனல் நிவா மல்கு
கரைமேல்'
'வாரிமா மலருந்தி வரு புனல் நிவா
மல்குகரை மேல்'
'மணி கலந்த பொன்னுந்தி வரு புனல் நிவா
கரை மேல்'
'பொன்னும்மா மணியுந்திப் பொருபுனல் நிவா
மல்கு கரை மேல்'

என்று பாடியுள்ளார்.

தட்சயாக பாவம் நீக்க அகத்தியர், வசிட்டர், பரத்வாசர், பராசரர், கௌதமர், காசிபர், கௌசிகர் முறையே காரியாந்துறை, திருவாலந்துறை, திருமாந்துறை, ஆடுதுறை வசிட்டதுறை. திருநெல்வாயில் அரத்துறை. கடம்பந்துறை ஆகிய சப்த தலங்களில் தவம் இயற்றினர்.

**சுவேதகேதுவும் பாவமன்னிப்பும் :**

தவநிலையில் தடுமாற்றமடைந்த சுவேதகேது அதற்கான காரணத்தைத் தன் தந்தையான உத்தாலகரிடம் வினவினர். தீர்த்த யாத்திரையின்போது திலோத்தமையால மோகவலைக்குள் சிக்கியதை சுவேத கேது உத்தாலகர் மூலம் அறிந்தார். பிரதோச பூசை வேளையில் திலோத்தமையுடன் கலந்திருந்தசுவேதகேதுவுக்கு பாவம் சம்பவித்தது. இதனால் கோபம் கொண்ட அவர் திலோத்தமையை குரங்காக மாற சபித்தார். உத்தாலகரின் உத்தரவுபடி ஆடுதுறை வந்து அண்ணலைத் தொழுது பாவம் நீங்கினார். சுவேதகேதுவின் குற்றத்தைப் பொறுத்த இறைவன் குற்றம் பொறுத்தவர் என வழங்கப்பட்டார். சுவேத கேதுவிடம் மன்னிப்புக் கோரிய திலோத்தமையை நீலன் என்னும் வானரனாக பிறந்து தேவதச்சனின் மகனாகி ஆடுதுறை ஆண்டவனை வணங்கிட வழி சொன்னார் முனிவர். அதன்படி நீலனாகிய திலோத்தமை ஆடுதுறை வந்து அண்ணலை வணங்கினாள். சேதுவில் வீதிசமைத்த பொறியாளராக இருந்து சேது பந்தனம் நிறைவேறவும் கிராம காரியம் சிறக்கவும் குற்றம் பொறுத்தவர் ஆணையிட்டார். இறுதியில் நீலன், அங்கதன் சுக்ரீவன், அனுமன் சுகேசிணன் ஆகிய வானவர்களுடன் வந்து ஆடுதுறை நிவாநதியில் நீராடியதால் அத்தலம் 'வானர ஸ்நான தீர்த்தபுரம்' என வழங்கப்பட்டது. நீலன் சாபம் நீங்கப் பெற்று அம்மன் சன்னதி மண்டபத் தூணில் இடம் பெற்றுள்ளான்.

**சரித்திர சிற்பமுக்கியத்துவம்:**

வடவெள்ளாற்றின் தென்கரையில் கிழக்கு முகமாய் கம்பீரமாய் இக்கோயில் அமைந்துள்ளது. கோயில் கிழக்கு மேற்காக 345 அடியும், தெற்கு வடக்காக 172 அடியும் நீள அகலத்துடன் சுமார் 5 ஏக்கர் பரப்பில் அமைந்துள்ளது. கிராம கோபுரங்கள் வரிசையில் நாயக்கர் பாணியாக இராசகோபுரம் கி.பி. 1460-ல் மல்லிகார்ச்சுன ராயரால் அமைக்கப்பட்டுள்ளது. 12-ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் அனேகம் உள்ளதால். அதற்கு முன்பு கோயிலின் நிலையை உறுதிபடக் கூற இயலவில்லை. இராசகோபுரம் ஏழு அடுக்குடன் சுதை சிற்ப வேலைப்பாடுகளுடன், கோபுரவாயிலின் இரு பக்கங்களில் நடன காட்சிகளுடன் மேல் கொடுங்கைகளில் 16 சிங்கங்களின் சிற்பங்களுடன் உள்ளன. அதன் இரு மருங்கிலும் உள்ள கங்கா, யமுனா, கொடி பெண்கள் நம் மனதைக்கொள்ளைக் கொள்வன.

**ஓவியங்கள் :**

அம்மன் சன்னதிக்கெதிரில் உள்ள திருமண மண்டபத்தின் மேற்கூரையில் நாயக்கர் கால ஓவியங்கள் நம்மை திக்கு முக்காடச் செய்கின்றன. 17 வரிசையில் 6 வரிசை அழிந்தது போக எஞ்சிய ஓவியங்கள் இன்றும் தெளிவாக, அழகாக உள்ளன. மார்க்கண்டேயர் வரலாறு. சிவனின் ஊர்த்துவ தாண்டவம், ஆடல் பாடல் இசைத்தல், உலாக்காட்சிகள் தெய்வங்களின் பெயர்களுடன் தீட்டப்பட்டுள்ளன. அம்மன் சன்னதி தனியே தெற்கு நோக்கி முன் மண்டபத்தில் அமைந்துள்ளது. சூரியன் பீடாதாரமாக அமைந்துள்ளார். பங்குனி மாதம் 11, 12, 13-ஆம் தேதிகளில் மூலவர் மேல் சூரிய ஒளிபட்டு சூரிய பூசை நடப்பது வழக்கம்.

**மாசி மகம்:**

'மாசிமகம்' இத்திருக்கோயிலின் பெருந் திருவிழா ஆகும். 'மறந்து போன திதியை மகத்தில் கொடு' என்பதற்கேற்ப இன்றும் நீவா நதியில் மக்கள் திரளாக திவசம் கொடுப்பதைக் காணலாம். அன்று நீவா நதியில் பல புண்ணிய நதிகள் கலப்பதாக ஐதிகம். மூன்று கால பூசை காமிக சிவாகமத்துடன் செய்யப்பட்டு வருகிறது. இத்திருக்கோயிலுக்கு 165 ஏக்கர் நன்செய் புன்செய் நிலங்கள் இருந்தும் இத்திருக்கோயிலின் வருவாய் ரூபாய் ஒரு இலட்சத்திற்குட்பட்டே உள்ளது. இறைவனுக்கு விளக்கெரிக்க இலுப்பைவேலந் தோப்புக்கள் 4 உள்ளன. இத்திருக்கோயிலில் உள்ள செப்பேடு (கி.பி. 1798) முக்கியமான ஒன்றாகும். 23 கல்வெட்டுக்களும் சோழ பாண்டிய நாயக்கர் அளித்த கொடை நிவந்தங்களையும் வரிவிதிப்புக்களையும் தெளிவாகக் கூறுகின்றன.

புராண சரித்திர சிற்ப கலை. முக்கியத்துவம் பெற்ற ஆடுதுறை தலத்தைத் தரிசித்து குற்றம் பொறுத்த பெருமானின் திருவருளைப் பெறுவோமாக.

# தேவூர்

புலவர் கண்ணபுர
**பொன். சுப்பிரமணியன்**
திருகண்ணபுரம்.

பண்ணி லாவிய மொழியுமை
பங்கனெம்பெருமான்
விண்ணில் வானவர் கோன்விம
லன் விடை யூர்தி
தெண்ணி லாமதி தவழ்தரு
மாளிகைத் தேவூ
ரண்ணல் சேவடி ஆடைந்தனம்
அல்லலொன் றிலமே

—திருஞானசம்பந்தர்

'வானிடத்தவரும் மண்ணில் வந்து அரன் தனையருச்சிப்பர்' என்ற திருவாக்கிற்கிணங்க தேவர்கள் பூவுலகில் உள்ள பல தலங்களுக்கு வந்து இறைவனை வணங்கியதாகப் புராணங்கள் பேசுகின்றன. அத்தகைய பெருமைவாய்ந்த தலம் தேவூர் இது தேவாரப் பாடல் பெற்றதலம். நாகை காயிதேமில்லத் மாவட்டப் பகுதியில் இருக்கிறது. திருவாரூர் நாகூர் இருப்புப் பாதையில் கீழ்வேளுர் என்ற நிலையத்திற்குத் தெற்கே இரண்டு கல் தொலைவில் தேவூர் இருக்கிறது. கீழ்வேளூரி லிருந்து மன்னார்குடி பட்டுக்கோட்டை திருத்துறைப்பூண்டி முதலிய ஊர்களுக்கு இவ் வூர் வழியாகப் போகும் பேருந்துகள் மூலம் சென்றால் இத்தலத்தை வழிபடலாம்.

இத்தலத்தைக் கதலிவனம் விராடபுரம் அரசங்காடு என்ற திருப்பெயர்களாலும் அழைப்பதுண்டு. திருப்புகழில் தேவனூர் என்று வழங்கப்பட்டுள்ளது. கடுகையாற்றின் தென்கரையிலுள்ளது.

தேவூர் அழகிய சிற்றூர். ஊருக்கு நடுவில் இத்திருக்கோயில் அமைந்திருக்கிறது.

கோச்செங்கட்சோழன் கட்டிய மாடக் கோயில்களில் இது ஒன்று எனக்கூறப்படுகிறது. கிழக்குத் திருவாயிலில் கோபுரம் உள்ளது. இரண்டுபிரகாரங்களில் ஒனறு நிலப்பரப்பிலும் மற்றொன்று கட்டுமலைக் கோயில் மேலுமாக இருக்கின்றன. கோயிலுக்கு வெளியே கோபுர வாயிலுக்கு வடபுறம் வசந்த மண்டபம் இருக் கிறது. கட்டு மலையேறுபடிகளின் இருமருங் கும் விநாயகரும் முருகனும் எழுந்தருளியுள்ள னர். அதற்கு வடக்கே இந்திரன் வழிபட்ட இந்திரலிங்கம் உள்ளது. இதை இந்திரேச் சுவரம் என்பர். கட்டுமலையின் மேலே ஏறிய தும் நேரே சோமாஸ்கந்த மூர்த்தி காட்சி யளிக்கிறார். அதற்கு வடக்கே மூலஸ்தானத் தில் அருள்மிகு தேனுபுரீசர் எழுந்தருளியிருக் கிறார். இம்மூர்த்திக்கு தேவபுரீசர் தேவ குருநாதர் கதலிவனேசுவரர் என்ற திருப் பெயர்கள் உண்டு.

இத்தலவிருட்சமான வாழை கட்டுமலை மேல் இருக்கிறது. இது இம்மலையில் சிறு இடத்திற் அழியாது விளைந்து கொண்டு இருப் பது மிகவும் வியப்பிற்குரியது. இத்தலத்தைப் போல் திருக்கண்ணபுரத்துக்கு பக்கத்தில் உள்ள திருமருகல் தலத்தின் தலவிருட்சம் வாழை என்பது குறிப்பிடத்தக்கது. மேலும திருபைஞ்நீலி என்ற தலத்திற்கும இவ் வாழையே தலவிருட்சம ஆகும். இந்த வாழையை இத்தலத்தை தவிர வேறு இடத் தில் வைத்தால் பயிராவதில்லை என்பது ஈண்டு நினைவு கூறத்தக்கது.

கோயிலின் தென் பிரகாரத்தில் அறு பத்து மூவர் சன்னிதியும் தென்மேற்கு மூலை யில் வலம்புரி விநாயகர் திருக்கோயிலும் உள்ளது. கட்டுமலைக்கு வடமேற்குப் பக் கத்தில் முருகப் பெருமான இலட்சுமி திருக் கோயில்களும் உள்ளன. அதற்கு அருகே அகலிகை வழிபட்ட லிங்கம் உள்ளது. எதிரே மேற்கு நோக்கிய சந்நிதியுடன செய்குன்றின் மேல் கௌதமலிங்கம் உள்ளது. இவற்றிற் கெல்லாம் வடபுறத்தேதான் அம்பிகையின் திருக்கோயில் இருக்கிறது. தேவியின் திரு நாமங்கள் தேன்மொழியம்பிகை மதுரபா சினியம்மை என்பன. வடக்குப் பிரகாரத் தில் நடராசர் சந்நிதியும் நவக்கிரகங்களும் இருக்கின்றன.

தலப்புராணத்தில் இப்பதிக்கு ஒன்பது தீர்த்தங்கள் உள்ளனவாகக் கூறப்படுகின்றன. தேவதீர்த்தம் கோயிலுக்குத் தென்கிழக்கு மூலையில் உள்ளது. வருணதீர்த்தம் உத்தர தீர்த்தம் பிரகஸ்பதி தீர்த்தம் கௌதம புஷ்கரணி மிருதசஞ்சிவினி முதலியவை மற்ற தீர்த்தங்கள். வைகாசி மாதத்தில் பெரு விழா நடைபெறுகின்றது.

ஏழாம் நூற்றாண்டில் உலகம்போற்றும் திருஞானசம்பந்தர் பெருமான் இப்பதிக்கு எழுந்தருளி இறைவன்மேல் இரண்டு பதி



கங்கள் பாடியருளினார். 'தென்தமிழ்க்கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்' என்றும் 'சங்கமலி செந்தமிழ்கள் பத்து' என்று கூறுவதால் தமிழறிஞர் பலர் இவ்வூரிலிருந்திருக்கலாம் என்று அறிய முடிகிறது. அப்பர் பெருமானும் பாடியருளியிருக்கிறார். அருணகிரிநாதர் இத்தலத்து முருகப் பெருமானைமூன்று திருப்புகழ்ப் பாடல்களால் பாடியருளியிருக்கிறார். மற்றொரு பாடலிலும் இப்பதியைக் குறிக்கின்றார். தேவனூர் என்றுதலத்தின் பெயரைக் கூறுகிறார். 'தேவர்யாவரும் திரண்டு பாரின் மீது வந்திறைஞ்சு தேவனூர் விளங்க வந்த பெருமாளே' 'சேரொணா வகை வெளியே திரியு மெய்ஞ்ஞான யோகிகளுமே யுறைதரு தேவநூர் வருகுமார வமரர்கள் தம்பிரானே' என்பவை அவருடைய திருவாக்குகள். மாணிக்கவாசகர் ''தேவூர்த் தென்பாற் திகழ்தரு தீவிற் கோவார் கோலங் கொண்ட கொள்கையும்'' என்று கீர்த்தித் திருவகவலில் திருவாய் மலர்ந்தருளினார்கள்.

''பாவூ ரிசை யிற் பயன்சுவையிற்
பாங்குடைய தேவூர் வளர் தேவனே'

என்று வடலூர் வள்ளல் பெருமான் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

தேவபுரி மான்மியம் என்ற வடமொழி நூல் தமிழ்மொழி பெயர்ப்புடன ஏட்டுச் சுவடியாக இருக்கிறது. இது பிரம்மகைவர்த்த புராணம் மேல்பாகம் சேத்திர காண்டம். தேவபுரி மான்மியத்தில் ஐந்தெழுத்துப் புகழ்ச்சியென்றும் எண்பத்தேழாவது அத்தியாயத்தில் உள்ளதாகக் கூறப்பட்டிருக்கிறது. தமிழில் உரைநடையாகவும் உள்ளது. தேவர்கள் இங்கு சிவபெருமானை வழிபட்டது. இந்திரன் விருத்தனைக் கொன்ற பாவம் அழிய இறைவனை வழிபட்டது. குபேரன் இராவணன் கவர்ந்த சங்கநிதியை மீண்டும் பெறத் தவம் கிடந்தது; விராடன் உத்திரன் இவர்கள் வழிபட்டது, கௌதமர் லிங்கத்தை பிரதிஷ்டை செய்து இறைவனை வழிபட்டு பஞ்சத்தைப் போக்கியது. பசுவொன்றின் கன்று இறந்து போக பெருமான் தாய்ப்பசு உருக்கொண்டு பாலூட்டிவளர்த்தது முதலியவற்றைப் பற்றி அத்தலபுராணம் விரிவாகக் கூறுகிறது.

இக்கோயிலின் கட்டுமலையின் தென்புறம் வடபுறச்சுவர்களில் இரண்டு தமிழ்க் கல்வெட்டுகள் இருக்கின்றன. ஒன்று ஜடாவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி சுந்தரபாண்டியன் 111 (கி.பி.1276-90) காலத்தது. கோயிலுக்கு நிலதானம் செய்தது. அருள்மொழித் தேவ வளநாட்டுத் தேவூர் நாட்டுத் தேவூரிலிருக்கும் ஆதிச்சரமுடையார் கோயில் என்று குறிக்கப்படுகிறது. மற்றொரு கல்வெட்டு விஜய நகர மன்னரான இரண்டாம் தேவராய மகாராயர் காலத்தில் கி.பி. 1425-ல் பொறிக்கப் பெற்றது.

இத்தலத்தில் உத்தரேசமுடையார் பசுபதீசுவரர் கோயில் பெண்மணி ஐயனார் கோயில் மாரியம்மன் கோயில் முதலியனவும் இருக்கின்றன.

# மலைக்கோட்டை அய்யனார் திருக்கோயில் வரலாறு

கி. ஸ்ரீதரன், எம்.ஏ.

R. RAJU,
Dy Commissioner H.Qrs.
(Retired)
HR&CE Administration Dept

திருச்சிராப்பள்ளி என்றாலே மலைக் கோட்டை கோயிலும். உச்சிப்பிள்ளையார் கோயிலும், தெப்பக்குளமும் கண் முன்தோன்றும் மலைக்குச்செல்லும் பாதையில் மாணிக்க விநாயகரும், மலை உச்சியில் உச்சிப்பிள்ளை யாரும் இருந்து கொண்டு தன்னை நாடிவரும் பக்தர்களின் துன்பங்களைப்போக்குகின்றனர்.

மலைக்கோட்டை தாயுமான சுவாமி திருக்கோயிலின் சிறப்பே தனிதான்; தாய் என்றாலே கருணை உடையவர் என்பது பொருள். இறைவன் தாயாகவே மாறி அன்பர் களின் துன்பத்தைப் போக்குகின்றான். இரத்தினாவதி என்ற பெண்ணுக்கு இறைவனே தாயாக மாறி பிரசவம் பார்த்தவரலாற்றை நாம் அறிவோம். இறை அருள் மீது நம்பிக்கை இருந்தால் அவன் எவ்விதத்திலாவது நம்மை வந்து காத்து அருள் செய்வான் என்பதற்குச் சாட்சியாக தாயுமானவர் என்ற பெயருடன் இறைவன் சாட்சி தந்து அருள்புரிகின்றார். பிரசவம் சுகமாக நடைபெற வேண்டிக் கொண்டு இங்கு இறைவனுக்கு வாழைப்பழத் தார் சமர்ப்பிப்பதை இன்றும் காணலாம். இங்கு கோயில் கொண்டு விளங்கும் இறைவன் மாத்ருபூதேசுவரர், செவந்தி நாதர், திருமலை கொழுந்தர் என்றெல்லாம் பெயரிட்டு அழைக்கப்படுகின்றார். இங்கு அருள்புரியும் தேவி 'சுகந்த குந்தளாம்பிகை' 'மட்டுவார் குழலி' என்ற பெயருடன் தன் கரங்களில் அங்குசம் பத்மம் தாங்கி அன்பர்களுக்கு அருள் வழங்குகிறாள்.

இலக்கியச் சிறப்பும் வாய்ந்தது இத்திருக் கோயில். ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், அருணகிரிநாதர் ஆகிய பெருமக்கள் போற்றி பாடிய தலமாக விளங்குகிறது. இறைவன் சன்னதியில் உள்ள தட்சிணாமூர்த்தியின் அருள் பெற்று ஞானியாக விளங்கினார் தாயுமான சுவாமிகள். சைவ எல்லப்ப நாவலர் செவ்வந்திப்புராணம் என்ற பெயரில் தலபுராணம் ஒன்றினை இயற்றியுள்ளார்.

**வரலாற்றுச் சிறப்பு:**

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு இம் மலையில் சமண முனிவர்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளன. கல்வெட்டுகளும் காணப் படுகின்றன. பல்லவ மன்னன் மகேந்திர வர்மனால் எடுக்கப்பட்ட லலிதாங்குர பல்லவேசு வரகிருகம் என அழைக்கப்படும் குடவரைக் கோயில் மலையின் உச்சியில் உள்ளது. இங்குக் காணப்படும் கங்காதர மூர்த்தியின் வடிவம் மிகவும் அழகானது. 'திரிசிராமலை அந்தாதி' என்ற இலக்கியம் முழுமையும் இங்கு கல் வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ள சிறப்புடையது. கீழே இருக்கும் குடைவரைக்கோயில் விநாயகர், முருகன், பிரம்மா, துர்க்கை சூரியன், திருமால், சிவன் ஆகியோருடன் எடுக்கப்பட்டதாகும். சோழ மன்னர்கள், பாண்டியர், போசளர், விஜயநகர நாயக்க மன்னர்கள் இக்கோயிலுக்குப் பெரும் அளவில் தானமளித்துப் போற்றியுள்ளதை அங்குள்ள கல்வெட்டுகள் எடுத்துக் கூறுகின்றன.

மலையைச் சுற்றி சுற்றுக்கோயில்கள் பல உள்ளன. முனீசுவரன், அய்யனார், ஆஞ்சனேயர் வன்னியடி கருப்பு, பிடாரி கோயில் ஆகியவை உள்ளன.

**அய்யனார் கோயில் :**

இவற்றில் தேசுமிக்க ஐயனார் கோயில் மிகவும் சிறப்பானது. மலையின் கீழ் சுற்றுப் பாதையின் அருகில் வடகிழக்கு மூலையில் இக் கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய சன்னதியுடன் அமைந்த கோயில். தெற்கே இரண்டு நிலையுடைய அழகிய சுதை உருவங்கள் அமைந்த கோபுரம் நம்மை வரவேற்கிறது.

நுழைந்தவுடன் இடது புறம் பிள்ளை யாரும் முருகன் வள்ளி தெய்வானையுடன் காட்சி தருகின்றனர். அவருக்கு எதிரே நந்தி உள்ளது. சற்று உள்ளே தள்ளி முருகன்

பாலதண்டாயுதபாணியாககாட்சிதருகின்றார். அவருக்கு இருபுறமும் விநாயகர் வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.



**அய்யனார்:**

அடுத்து உள்ள கருவறையில் அய்யனாரில் அற்புத திரு உருவைக் காணலாம். நின்ற கோலம். மேலிரு கரங்களில் பிச்சுவா போன்ற கத்தி, வலது கீழ்க் கையிலும் கத்தி, இடது கையில் கதை, கால்களில் மரபாதரட்சைகளை அணிந்து நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். கோபமாக, இருப்பது போல தோன்றினாலும் கருணை பொங்கும் கண்கள், இருபுறமும் பூரணை புஷ்கலை ஆகிய தேவியர்கள் உள்ளனர். பூரணை வலது கையில் கத்தியும் இடது கையில் மலரும் உள்ளது. புஷ்கலையின் வலது கரத்தில் மலரும் இடது தோளில் வில்லும் அம்பும் உள்ள நிலையில் காட்சி தருகின்றனர்.

அய்யனார் சன்னதிக்கு இடப்புறம் சப்த கன்னியர் எழுந்தருளியுள்ள தனி சன்னதி உள்ளது.

**கல்வெட்டுக்கள்**

முன் மண்டபத்தில் கருப்பண்ணசாமி, சப்பாணிக் கருப்பு, சாம்பான், காத்தவராயன், பேச்சியம்மன் அகோர வீரபத்திரர், லாடசன்னியாசி, அக்காண்டியம்மன் ஆகிய தனித் தனி சன்னதிகள் உள்ளன. இம்மண்டபத்தில் உள்ள கல்வெட்டு விரோதி வருடம் ஆனி மாதம் 12-ம் தேதி முடிந்த இந்த புது மண்டபத்தில் திருவானைக்காவல் சப்பாணிபிள்ளை பெண் ஜாதி மீனாட்சியம்மாள் தர்மம் 200 ரூபாய் சேர்க்கப்பட்டுள்ளது என்று குறிப்பிடுவதால் அண்மைக் காலத்தில் கட்டப்பட்டதாக அறிய முடிகிறது.

முன் மண்டபத்தில் யானை வாகனமும், அதற்கு வெளியே தலமரமான வில்வ மரம், பனையடி கருப்பு ஆகியவை சிறப்பாக வழிபடப் பெறுகிறது. இதற்கு அமைக்கப்பட்டுள்ள மேடையில் காணப்படும் கல்வெட்டு பாண்டிய தேவருக்கு 5-வது ஆண்டு திருநாகீசுவரமுடை-சதுர்வேதி மங்கலத்து தென். பாண்டிய தேவருக்கு 5-வது ஆண்டு திருநாகீசுவரமுடை-சதுர்வே\ தி மங்கலத் தென் னூருக்கு-வடக்கு அண்டங்கொண்டான்-நான் கெல்லைக்கு உட்பட்ட நிலம் தந்தோம் எனறு குறிப்பிடுகிறது. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர்கால கல்வெட்டு திருநாகீசுவரமுடையார்கோயிலுக்குஅளித்த நிலக் கொடையைப் பற்றி கூறுகிறது. எனவே இக் கல் வேறு கோயிலிலிருந்து இங்கு வந்து கொண்டு வந்து இங்கு போடப்பட்டிருக்க வேண்டும் என்பதை ஊகிக்க முடிகிறது.

**புராண வரலாறு**

மலைக் கோட்டை தாயுமான சுவாமிகளின் திருக்கோயிலில் அம்மன் சன்னதிக்கு எதிர்ப்புறம் பாதாள அய்யனார் சன்னதி உள்ளது. பூஜை செய்ய வந்த குருக்கள் தன்னுடன் அழைத்து வந்த குழந்தையைச் சன்னதியில் மறந்து விட்டுவிட்டு வீட்டுக்கு வந்து விடுகிறார். குழந்தையைக் காணாமல் திரும்பவும் கோயிலுக்கு வந்து பூட்டியகதவின் இடைவெளியில் பார்க்க தெய்வமும், அவருடைய குழந்தையும் விளையாடிக் கொண்டிருக்கின்றனர். மனைவியின் வற்புறுத்தலினால் நம்பிக்கையின்றி குழந்தையைக் கேட்க கோபம் கொண்ட அத்தெய்வம் குழந்தையை இரண்டாக கிழித்து எறிந்து விட்டதாக கூறப்படுகிறது. இதனால் அத்தெய்வத்தை குடத்தில் எழுந்தருளச்செய்து மலையைவிட்டு கீழே கொண்டு வந்து தற்பொழுது இருக்கும் இடத்தில் வைத்து பின்னர் கோயிலை அமைத்ததாக செவிவழிச் செய்தி கூறுகிறது. எனினும் மலைக்கோட்டை கோயிலின் எல்லைத் தெய்வமாக அய்யனார் கோயில் விளங்குகிறது. ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் தாயுமானவர் சனதியிலிருந்து பிரசாதம் கொண்டு வரப்பட்டு பூஜை நடைபெறுகிறது.

இத்தலத்தில் வழிபடுவதால் திருமணத் தடை நீங்கும். புத்ரபாக்யம் உண்டாகும். இத்தலத்தில் உள்ள பழமையான பனை மரத்தில் எழுந்தருளியிருக்கும் கருப்பண்ணசாமியை சுமங்கலிகள் வெள்ளி தோறும் பூஜை செய்கின்றார்கள்.

**திருவிழா**

மாசி மாதம் 10 நாட்கள் திருவிழா இக் கோயிலில் நடைபெறுகிறது. யானை, குதிரை பூதம், ரிஷபம் ஆகிய வாகனங்கள் இக்கோயிலில் உள்ளன. தருமபுரம் ஆதினம், மௌன மடம் கட்டளையால் இக்கோயிலுக்கு வழிபாடுகள் செய்யப்படுகின்றன மலைக் கோட்டை கோயிலின் நிர்வாகத்தின் கீழ் இக்கோயில் செயல்பட்டு வருகிறது 80 ஆண்டுகளுக்கு பின்னர் நடைபெறும் குடமுழுக்கு விழாவில் நாமும் கலந்து கொண்டு நலமடைவோமாக.

# எட்டில் மனதை இட்டுக்கோள்

நல்லாசிரியர் **வெ. சுந்தரம்,** பரமக்குடி.

உலகின் எண்ணற்ற உயிரினங்கள் நிலத்தின் மீதும் நீரிலும் பிறந்து வாழ்ந்து மறைகின்றன. ஒவ்வொரு உயிரும் அவைகளுக்கேற்ற பணிகளை மாத்திரமே செய்கின்றன. சுவாசித்தல் உணவு உட்கொள்ளல் வளருதல் இனப்பெருக்கம் செய்தல் போன்ற நிலைகளைத் தவறாது செய்கின்றன. தன் நிலையிலிருந்து தன்னை உயர்த்திக் கொண்டு இறையை ஆத்ம தரிசனமாகக் காண்பது மனிதர்களாலேயே ட்டும் முடியும்.

'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்' என்று ஆன்றோர் கூறியதை எண்ணிப் பார்க்க வேண்டும். மனம் செம்மையுற என்ன வழி இன்பமான வாழ்வுக்கு குருவின் மூலம் தெளிவு பெற்றால்மனம் செம்மையுற்று சிறப்பாகும். 'குரு' என்பவர் கல்விபோதனை செய்பவர் என்று மாத்திரம் எண்ணுதல் கூடாது. அறியாமையை நீக்குபவர் என்பதே 'குரு' என்ற வார்த்தைக்கு உரிய நேர் பொருளாகும்.

குருவானவர் மனம் செம்மையுற வழி காட்டுவார். ஞான குருவாக விளங்கிய 'வியாச பகவான்' எட்டு விதமான நிலைகளில் இறைவனை ஒட்டிக்கொள்ளலாம் என பாகவதத்தில் கூறுவார்.

வெளிமாயையில் மனம் ஈடுபட்டு எப்போதும் மனம் லயித்து விடுவதால் அவற்றில் ஈர்க்கப்பட்டு சிற்றின்ப நிலையை உண்மையென நம்புகின்ற நிலை ஏற்படுகிறது. இந் நிலையை மாற்றிட இறையோடு ஐக்கியமாவதற்கு எட்டுவிதப்படிகள் காட்டியருளினார். எட்டில் நம் மனத்தை இட்டுக்கொள்ள மாயை மறைந்து தூய நிலை (உண்மை) தோன்றும். ''அஷ்டாங்கயோகம்' என்னும் 'எட்டு விதத்தன்மைகள் நம்மைஎட்டிவிட்டால் கிட்டாத யோக சித்தி கிட்டும்' என்பர் ஆன்றோர்.

(1) இயமம் (2) நியமம் (3) ஆசனம் (4) பிராணாயாமம் (5) பிரத்யாகாரம் (6) தாரணை (7) தியானம் 8. சமாதி என்பன அவ்வெட்டுப் படிகள்.

(1) **இயமம்:** பிறருக்குத் தீங்கிழையாமை, உண்மை அல்லது சத்தியம், பிறர் பொருளை விரும்பாமை, திருடாமல் இருப்பது பிரம்மச்சரியத்தின ஒழுங்கைக் கடைப்பிடித்தல், பிறருக்கு இயன்றளவு உதவுதல், உதவி செய்வோரைத் தடுக்காது இருத்தல் போன்றவை 'இயமம்' என்ற முதற்படியாகும்.

2. **நியமம்** : உடலுறுப்புக்கள் உடைகள் தூய்மையாக வைத்துக் கொள்ளல். எப்போதும் மகிழ்வே கொள்ளல், வீணான கவலைகளை விடுத்தல். துக்க சம்பவத்தில் சிறிதே கவலை ஏற்பட்டாலும் உரிய கிரியைகள் நடத்தி முடித்து இனிமேல் துக்கமின்றி மகிழ்வுடன் இருக்கலாம் என்று செயல்பாடுகள் செய்வது இங்கு ஒப்பு நோக்கலாம். இறப்பு என்ற துக்கம்கூட சுபசுவீகாரம் செய்ததோடு நீங்கிவிட வேண்டும். மகிழ்வு கொள்ள மனத்திற்குப் பயிற்சி தரல் வேண்டும். நல்ல நெறிகள் கூறும் ஆன்மீக நூல்களை அறிஞர்களின் நூல்களைக் கற்றுத் தெளிதல், தவம் என்று கூறும் தன் கடமைகளைக் கவனமுடன் செய்தல், இறை வழிபாடு ஏற்று இன்புறுதல் ஆகியவை 'நியமம்' எனப்படும் இரண்டாம் நிலையாகும்.

3. **ஆசனம் :** உடற்பயிற்சிகளுக்கும் யோக நிஷ்டைகளுக்கும் கட்டாயம் ஆசனம் தேவை. இறை வழிபாட்டின்போது பத்மாசனம் சுகாசனம் மேற்கொள்ள வேண்டும். வேறுவித உடற்பயிற்சிகளில் வஜ்ராசனம், மகராசனம் போன்ற பல்வேறு நிலைகள் உண்டு. அவற்றை முறையாகத் தகுந்த குருவின் மூலம் அறிந்து தேவைக்கேற்ப, உடலுக்கு ஏற்புடைத்தான ஆசனங்களைச் செய்தல் முறை.

பொதுவாகக் கால்களை மடக்கி அமரும் சுகாசனம் எல்லோருக்கும் எளிது. முதுகு வளையாமல் ஏதாவதொரு ஆசனத்தின மீதமர்ந்து, (பலகை, கெட்டியானபாய், துணியை விரித்துஅமர்தல்) இறைவழிபாடுசெய்யவேண்டும். உணவு உட்கொள்ளும்போதும் ஆசனம் (விரிப்பு அல்லது பலகை) பயன்படுத்த வேண்டும். தரையிலமர்ந்து உண்ணல், இறையை வழிபாடு செய்தல் உயர் பலனைத் தரவல்லதில்லை என்பர். திருக்கோயில்களுக்குள் இது பொருந்தாது என்றும் ஆன்றோர் கூறுவர். சுகாசனம ஒரு ஆசனத்தின் மீது அமைய வேண்டும் என்பது மூனறாம்படியாகும்.

**பிராணாயாமம்** : சுவாசத்தை ஒழுங்குபடுத்துதல். நாசியின் வலது துவாரம் மூலம் மூச்சை உள்ளிழுத்தல். பின் இடது துவாரம்வழியாக வெளிவிடல். சிலமுறை (நான்கு அல்லது ஐந்து முறை) செய்து பினனர் மாற்றிச் செய்தல். இடது துவாரம் மூலம் உள்ளிழுத்து வலது துவாரம் வழியாக வெளிவிடல். வலது கையால் மூக்கைப் பிடிக்கும்போது இடது கை, கொப்பூளை உள்ளங்கையால் தொட்டு மூடியிருப்பதும், இடது கையால் மூக்கினைத் தொட்டிருக்கும்போது வலது கை உள்ளங்கையால் கொப்பூள் மூடியபடி தொடுநிலை (அழுத்தமின்றி)யில் இருக்க வேண்டும்.

நாசித்துவாரங்களின் மூலம் பூரக (உள்ளிழுத்து மூச்சை நிரப்புதல்) கும்பக (மூச்சறைகளில் நிறுத்துதல்) ரேசக (மூச்சை வெளிவிடல்) ஆகிய முச்செயல்களைச் சீராகச் செய்தல் வேண்டும். வாத பித்த சிலேட்டுமங்களை நீக்கி ரத்தசுத்தி உடல் மனம் தூய்மை செய்தல் நான்காம் படியான பிராணாயாமம் ஆகும்.

5. **பிரத்யாகாரம் :** —எத்தனையோ வித எண்ண அலைகள் சித்தத்தில் தோன்றி மறை

யும். எண்ணப் பதிவுகளை அதளதன் இந்திரிய தன்மைகளில் செயல்பாட்டுக்கு திருப்ப சித்தத்துள்ளே உள்முகப்படுத்தல். சான்றாக திருக்கோயிலுக்குச் செல்லும்போது பலவகையான நடவடிக்கைகளைக் கண்கள் பார்த்தும் காதுகள் கேட்டும் அவை சித்தத்தில் அமையும். கோயில் வழிபாட்டிற்குச் செறைதும் முன்பு பார்த்தவை கேட்டவை மாற்றப்பட்டு இறை வழிபாட்டை நிலை நிறுத்துதல் ஆகும். திரும்பி வரும்போது முன்னர் கண்டகாட்சிகள் புதிய காட்சிகள் காதால் கேட்பவை போன்றவை எண்ணத்தில் தோற்றமுற்ற போதும் அவற்றைப் போக்கித் திருக்கோயில் வழிபாடு இறையின திருமேனி இவற்றை சித்தத்தில் பதிவாக்கி உள்முகப்படுத்தல். இது போன்ற நலந் தரும் சிந்தனைகளைப் பதிவாக்கி உள்முகப் படுத்துதல். இந்த ஐந்தாம் நிலையானதே 'பிரத்யாகாரம்' எனப்படும்.

6. **தாரணை :** உடலாம் ஐம்பொறிகளின் வழியே மனம் செல்ல அளவிடற்கரிய ஆசைகள் ஏற்படுகின்றன. தின்பண்டத்தைக் கண்டதும் நாவில் எச்சில் ஊறியதும் அதை அடைய மனம் ஈடுபடுகிறது. கவர்ச்சியான திரைப்பட சுவரொட்டியைக் கண்கள் கண்டதும் திரைப்படத்திற்குச் செல்ல மனம் ஈடுபடுகிறது. இதுபோல பொறிகளுக்கு அடங்கிய மனமாகச் செயல்படுவதைத் தவிர்க்க வேண்டும்.

மனத்திலே தேவைகள், அவசியத் தேவைகள், தேவையற்றவை ஆகியவற்றை சிந்திக்க வேண்டும். உணவு அவசியத் தேவை. உடலாரோக்கியத்திற்கு உரிய எளிய உணவு தான் போதுமானது. ஆடம்பர வீண் செலவுகளை ஏற்படுத்தும் உணவும் ஆரோக்கியமற்ற உணவும் தேவையற்றவை.

மற்றவரைப் பார்த்து நாமும் புறத் தேவைகளில் ஆசைப்பட்டு வருவாய்க்குமீறிய செலவு செய்து திண்டாடுவது தீமை. ஆகவே பொருள் வாங்கும்போதுகூட அவசியத் தேவை, தேவையற்றவை என பவற்றை ஆராய்ந்து மனம் ஈடுபட்டால் ஐம்பொறிகள் மனத்தின் கட்டுப்பாட்டில் இயங்கும்.

பொறிகளின் வழியே சித்தம் செல்லாது அணை கட்டிய நீர்போல செயல்பட்டு சிறப்பினைப் பெறச் செய்வதே ஆறாம்படியான தாரணை என்பதாகும். மனத்திற்குக் கட்டுப் பட்டு பொறிகள் இயங்க வேண்டும்.

7. **தியானம் :**—ஓரிடத்தில் ஆசனத்தின் மீதமர்ந்து (சுகாசனம் போதுமானது) முதுகுத் தண்டு வளையாமல் நிமிர்ந்தபடியும் இருகை விரல்களைக் கோர்த்து மடியில் வைத்துக் கொள்ள வேண்டும். எந்த தெய்வர் மீது தொழவுள்ளோமோ அத்தெய்வ உருவைச் சிந்தையில் கொண்டு கண்களை மூடி மனத்தில் இருத்தி வழிபடுதல். இறையின் திரு உருவத்தை திருவடி முதல் திருமுடிவரை ஒவ்வொரு அங்கமாக சிந்தையில் எண்ணி திரு அருளைச் சேர்க்க வேண்டும். குரு உபதேச மந்திரங்களை மனத்தில் தியானிக்க வேண்டும்.

குறிப்பிட்ட கால அளவு கொண்டு இறையை எண்ணி இதயத்தின் நிலைநிறுத்த உடலெங்கும் இரத்த ஓட்டத்துடன்இறையாற்றல் பெருகி. உடல் உள்ளம் ஆன்மா தூய்மையுடன் தெய்வநெறியில் விளங்கச் செய்வதே ஏழாம்படியான தியானம் ஆகும்.

8. **சமாதி நிலை :** தியானத்தின்போது பிறபுறச் செயல்கள் தெரியாதபடி கண்களை மூடிக் கொள்கிறோம். ஆனால், திறந்தபடி உள்ள காதுகளில் புற ஓசைகள் கேட்கும். மனம் அதையும் கிரகிக்கும். இதற்காகவே உபதேச மந்திரங்கள் மனத்துள் தியானித்த லாகும். தடுக்கும் ஆற்றல் மந்திரங்களுக் குண்டு.

புறஒளிகள் செவியில் பட்டாலும் மனத் தில் படாது ஒதுங்கும். மனத்தில் நிலை கொள்ளாது நாளடைவில் தியானத்தின் போது புறச்செயல்பாடுகளின் ஒலி அலைகள் பாதிக்காது. ஒளி அலைகளோ காதில் வெளிப் புறத்தோடு நின்றுவிடும். உட்புகாத ஒலியலையால் தியானம் ஒருமுகப்பட்டுவிடும். ஐம் பொறிகளும் மனக்கட்டுப்பாட்டில் இயங்கும்.

ஏதோ ஓர் சிந்தனையில் இருக்கும்போது மற்றவர் அழைப்பது, பேசுவது அறிய முடியாத நிலை சில நேரங்களில் ஏற்படுமே! அஃதே போன்று தியானத்தில் ஐம்புலன்களையும் அடக்கி ஆளப்பட்டு கால அளவு குறிப்பிடாமல் ஏற்படும் தியான உயர்நிலையே எட்டாம்படியான சமாதி நிலையாகும்.

**நிறைவாக :**

இச்சமாதிநிலையில்தான் இறையோடு இணைந்த ஆனந்த பரவச நிலை ஏற்படும். பூமியின் நிகழ்வுகள் எதுவும் தோன்றாது. ஸ்ரீராமகிருஷ்ண பரம ஹம்ஸர், சுவாமி விவேகானந்தர், ஸ்ரீரமண மகரிசி போன்ற எண்ணற்ற மகான்கள் இச்சமாதி நிலையில் இருந்து உலகிற்கு உண்மை ஞானம் புகட்டியதை வரலாறு கூறும்.

இந்த அட்டாங்க யோகம் பெற வெளி நாட்டினரும் மன அமைதி நாடி புண்ணிய பூமியாம் பாரதத்திற்கு வந்து பயின்று மேன்மை பெறுவதையும் கண்கூடாகக் காண முடிகிறது.

முதுகில் உள்ள கட்டியை மயக்க மருந்து இன்றியே அறுவை சிகிச்சை செய்யச் சொன்னவர் ஸ்ரீரமண மகரிசி. அறுவையின்போது பகவத் கீதையில் சமாதிநிலை கொண்டார். அறுவை சிகிச்சை முடித்த மருத்துவர்கள் பணி முடிந்ததெனக் கூறியதன் பின்னே ஸ்ரீரமணர் சிகிச்சை நடைபெற்ற தன்மையை அறிந்தார்.

ஒன்றிலே ஆழ்ந்து புலன்களை வசப் படுத்தி விட்டால் செயல் வெற்றி. அது இறை வழிபாட்டின் மூலமே கிட்டும். இதற்காக ஒவ்வொரு வழியாக படிக்கற்களை அமைத்தனர் நம் முன்னோர்.

படிப்படியாக நாமும் அந்நிலை பெற எட்டில் மனத்தை இட்டுக் கொள்வோம். இறையுணர்வாம் உயர் பேரின்பமடைவோம். அட்டமாசித்தியால் உலக மெங்கும் நலமே நிறைக! நம்பனடி போற்றி!

# பொற்கிழி அறுத்த விஷ்ணு சித்தர்

எஸ். சுந்தரம், திருமங்கலம்.

ஆனி மாதம் ஸ்வாதி நட்த்திரத்தில், ஸ்ரீ வில்லிபுத்தூரில் விஷ்ணுவின் வாகனமான கருடனின் அம்சமாக அவதரித்தவராய் ரங்க நாதனுக்கு மாமனாரான விஷ்ணு சித்தரென்னும் பெரியாழ்வாரை சரணடைகின்றேன்.

அக்காலத்தில் பாண்டிய நாட்டில் ஸ்ரீவல்லபதேவன் என்னும் அரசன், தர்மம் தவறாமலும் எளியோர்க்குப் பாதுகாவலனாகவும் கூடல் என்னும் மதுரை மாநகரைத் தலைநகரமாய்க் கொண்டு சிறந்த முறையில் ஆட்சி செய்து வந்தான். ஒரு நாள் அரசன் நகர சோதனை செய்து வரும்போது ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துறங்கும் அந்தணனைக் கண்டு எழுப்பி நீ யார் என்று கேட்டார். அதற்கு அவ்வந்தணன் 'நான் திவ்யதேசயாத்திரை செய்து கொண்டு வடநாடெல்லாம் சுற்றி கங்கை நீராடி வருபவன்'' என்று பதில் கூறினான். அது கேட்ட ஸ்ரீவல்லபதேவன், உனக்குத் தெரிந்த நல்ல ஸ்லோகம் ஒன்றைச் சொல் எனக் கேட்க அந்தணனும்

'வர்ஷார்த்த மஷ்டென ப்ரயதேத மாஸாந்
நிரார்த்த மர்த்தம் திவஸம் யதேத
வார்த்த க்யஹேதோர் வயஸா நவேந
பரத்ர ஹேதோரிஹ ஜந்மநாச'

மழைக்காலமாகிய ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி என்னும் நான்கு மாதங்களிலும், இன்புற்று மகிழ்ச்சியுடன் வாழ்வதற்காக மற்ற எட்டு மாதங்களிலும் அதற்கான ஏற்பாடுகளை முயலக்கடலன்; இரவில் இன்புறுவதற்காகப் பகற் போதில் பாடுபடக் கடவன்; கிழவனாகும்போது சிரமமில்லாமல் வாழ்வதற்காகப்பருவத்தில் பாடுபடக்கடவன். மறுமையில் இன்புறுவதற்காக இப்பிறவியில் முயலக் கடவன் என்ற ஸ்லோகத்தைச் சொன்னான். அரசனும் அன்று இரவு அந்த ஸ்லோகத்தின் பொருளைச் சிந்தித்துக் கொண்டே அயர்ந்து தூங்கினான் விடிந்தவுடன்'' இந்த ஸ்லோகத்தின் முதல் மூன்று பொருள்களிலும் சொல்லப்பட்ட குறைகள் நமக்கு இல்லை. அதைப் பற்றி நாம் செய்யப்பட வேண்டிய முயற்சி நாலாவது பொருளில் சொல்லப்பட்ட மறுமை இன்பத்தைக் குறித்து இதுவரை எந்த முயற்சியும் நாம் செய்யவில்லையே என்று கவலையடைந்தான். தனது புரோகிதரும் கல்வி, கேள்வி சாஸ்திரங்களில் மிகவும் தேர்ந்தவருமான செல்வ நம்பியை சந்தித்து இதற்கு வழி யாது என்று கேட்டான். அரசனுக்கு உறுதியான நம்பிக்கை பிறக்க முடிவு செய்த செல்வ 'நம்பியார்' நாடெங்கும் பறையறைவித்து, வித்வான்கள் சபையில் சிறந்த வேதாந்தங்களைக் கொண்டு பரம்பொருள் பற்றி ஒரு முடிவு செய்து அவ்வழியாலே பேறு பெறலாம்'' என்று உபதேசித்தார்.

அரசனும் அவ்வாறே ஏற்பாடுகள் செய்து ஒரு தோரணக் கம்பம் நட்டு, ஒரு வஸ்திரத்தில் பெரும் பொற்குவியலை இட்டு, அதை அக்கம்பத்தில் கட்டித் தொங்க விட்டு 'பரதத்துவத்தை நிர்ணயம் செய்கின்றவர் இப்பொற்கிழியைப் பரிசாகப் பெறலாம்' என்று நாடெங்கும் பறையறைத்து, தூதர்கள் மூலமும் அறிவித்தான்.

பலர் வந்து சொல் மாரி பொழிந்தும், பொற்கிழி அறுபடவில்லை.

எம்பெருமான் விஷ்ணு சித்தரின் கனவில் எழுந்தருளி பாண்டியன் அவைக்குச் சென்று ''நீர் போய்க் கிழியை அறுத்துக் கொண்டு வாரும்'' என்று அருளிச் செய்ய அதற்கு விஷ்ணு சித்தர் ''அது எல்லா சாஸ்திரங்களும் கற்றறிந்த பண்டிதர்கள் செய்ய வேண்டியதன்றோ! சாஸ்த்ராப்யாசம் பண்ணாமல் நந்தவன கைங்கர்யத்திலே ஈடுபட்டிருக்கும் நான் எவ்வாறு கிழியை அறுக்க முடியும்?'' என்று வினவினார். அதற்கு பகவான்'' அதைப் பற்றி உமக்கு ஏன் கவலை? உம்மைக் கொண்டு பரதத்துவ நிர்ணயம் செய்து வைக்கப்போவது நாமன்றோ? நீர் அவசியம் அங்கு போகவேண்டும்' என்று கட்டளையிட்டார் எம்பெருமான். விஷ்ணு சித்தரும் விடியற்காலையில் எழுந்திருந்து இந்தக் கனவைப் பற்றி சிந்தித்துக்கொண்டிருக்கையில் மறுநாள் காலையில் வடபெருங் கோயிலிலிருந்து கைங்கர்யக்காரர்கள் எம்பெருமானாலே நியமிக்கப்பட்டு, விஷ்ணு சித்தர் பாண்டியன் அவைக்குச் செல்ல, திருப்பல்லக்கும், திருச்சின்னம் முதலியவைகள் சகிதமாக வந்து நின்றார்கள். விஷ்ணு சித்தர் திகைப்படைந்து 'இது என்ன! இனியும் நான் எம்பெருமானின் கட்டளையை மீறலாமா!' என்று பரிவாரங்களுடன் புடைசூழப் பாண்டியனின் அவைக்கு எழுந்தருளினார். ஏற்கனவே செல்வ நம்பியின் மூலம் இவருடைய பெருமைகளைக் கேள்விப்பட்டிருந்த வல்லபதேவன் இவருடைய தேஜஸைக் கண்டு பெரும் வியப்படைந்தவனாய், செல்வ நம்பியோடுகூடச் சென்று இவரை எதிர்கொண்டழைத்துத் திருவடியில் விழுந்து,

'பட்டர்பிரான்' வந்தார் என்று கொண்டாடினான்.

ஏற்கனவே அங்கு குழுமியிருந்த பற்பல மதங்களைச் சார்ந்த வித்வான்கள் ''எல்லா வேதங்களின் சாஸ்திரங்களையும் அறிந்த எங்கள் முன்பாகவே, ஒரு சாஸ்திரமும் பயிலாத இவரைக் கொண்டாடுவது தகாது'' என ஆட்சேபித்தனர்.

அது கண்ட செல்வ நம்பி, விஷ்ணு சித்தரைப் பார்த்து 'வேதாந்த விழுப் பொருளான பரதத்துவத்தைப் பகர வேண்டும்' என்று பிரார்த்தித்தார்.

விஷ்ணு சித்தரும், பிரம்மாவின் அருளாலே ராமாயணம் முழுவதையும் காணப் பெற்ற வால்மீகியைப் போலவும் பல சிறந்த பண்டிதர்களும் வியக்கும்படி எம்பெருமானின் திருவருளால் வேதமுடிவாயுள்ள உண்மைப் பொருளை விளக்கினார். குருமுகமாக ஓதிய வேதவாக்கியங்களையும், தேவ லோகங்களில் நடையாடுபவையான அனந்த வேதவாக்கியங்களையும் பொழிந்து பரதத்துவத்தை நிர்ணயம் செய்து எல்லா வித்வான்களையும் வெற்றி கொண்டார்.

[இவர் வெற்றி கொண்ட முறையை விரிவாக பல்லாயிரக்கணக்கான பக்கங்கள் கொண்ட 'விஷ்ணு சித்த விஜயம்' என்னும் கிரந்தத்திலே அறியலாம்.]

''ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள்' என்று விஷ்ணுசித்தர் நிர்ணயித்தவுடன் பொற்கிழியானது, தானே கம்பத்துடன் வளைந்து வந்தது. இதைக் கண்ட விஷ்ணுசித்தர் இறைவனின் கருணையைக் கண்டு உகந்து அப்பொற்கிழியை அறுத்துக் கொண்டருளினார். அது கண்டு வியந்து வேந்தரும், செல்வ நம்பியும், மற்றும் அங்குள்ள வித்வான்களும், பண்டிதரும், மற்றோரும், இவர் திருவடிகளில் பணிந்து வணங்கினார்கள். ஸ்ரீவல்லபதேவன் விஷ்ணுசித்தரைத் தன் பட்டத்து யானை மேலேற்றி நகர் வலம் வரச்செய்தான். 'வேதப் பயன் கொள்ளவல்ல விஷ்ணுசித்தர் வந்தார்' 'மெய்நாவன் வந்தார்,' 'மெய்யடியார் வந்தார்' என பல விருதுகளை வழங்கினான்.

இப்படி நகர்வலம் வந்ததனயனின் சிறப்பைக் காண வந்த தந்தை போல ஸ்ரீ பூமி, நீளா சமேதராய். சங்கு சக்கர, கதாயுததாரராய் கருட வாகன மேலேறி விஷ்ணு சித்தருக்கும் அரசனுக்கும் மக்களுக்கும் காட்சியளித்தருளினார்.

முதலும் முடிவுமற்ற முதற்பொருளான, அமரர் தலைவனாகிய பரந்தாமன் தேவ லோகத்திலுள்ள தேவர்கள், பிரம்மன், விஷ்ணு சிவன் புடைசூழ வரும் இக்காட்சியைக் கண்டு குதித்துக்கொண்டாடினார்கள். விஷ்ணுசித்தர் ஆனந்தப் பெருக்கினால், அன்பின் மிகுதியில், அவ்விறைவனை எழில் நிலை பெற்றிருக்கும்



வகையில் 'பல்லாண்டு' பாடி வாழ்த்தினர். பல்லாண்டு பாடியதைக் கேட்ட எம்பெருமான் விஷ்ணுசித்தருக்கு 'பெரியாழ்வார்' என்னும் பட்டத்தை சூட்டி மறைந்தருளினார்.

பாண்டிய பட்டர் அருளிச் செய்த இரு விகற்ப நேரிசை வெண்பா :

'மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்று
ஒருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்-
முன்னால்
கிழியறுத்தானென்றுரைத்தோம் கீழ்மை
யினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து''

''பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான்
வந்தானென்று
ஈண்டிய சங்கமெடுத்தூத-வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று'
[அப்பிள்ளை அருளிச் செய்தது]

''நல்ல திருப் பல்லாண்டு நவின்றோன்தாள்
வாழியே
நானூற்றி அறுபத்தொன்றும் நமக்குரைத்தான்
வாழியே
சொல்லரிய வானிதனில் சோதி வந்தான்
வாழியே
தொடை சூடிக் கொடுத்தவள் தன்
கொழுந்தகப்பன் வாழியே
செல்வ நம்பி தன்னைப் போல சிறப்புற்றான்
வாழியே
சென்று கிழியறுத்து மால் தெய்வ மென்றான்
வாழியே
வில்லிபுத்தூர் நகரத்தை விளக்கினான் வாழியே
வேதியர் கோன் பட்டர்பிரான் மேதினியில்
வாழியே''

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

# கோபுர தரிசனம்

## ஏ. வி. இராஜகோபால்

(சிறுகதை)

ரயில் ஒரு சிறிய ஸ்டேஷனில் நின்றது. வேதாசலம் வெளியே பார்த்தார். ஸ்டேஷனுக்கு வெளியே ஒரு கோவில் கோபுரம் தெரிந்தது. அதைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

''கடிவாள மனசு''...எதிரே இருந்தவர் சொல்லக் கேட்டு துணுக்குற்றார் வேதாசலம்.

அது ஒரு முதல் வகுப்புப் பெட்டி வண்டியேறும் போதே தன்னுடைய ரயில் பெட்டியின் நுழைவில் ஒட்டியிருந்த காகிதத்தில் தன் சகப்பயணியின் பெயரைப் பார்த்தார். பரந்தாமனார் என்றிருந்தது. 'அடப்பாவி, இந்த மனிதனா!' என்று நினைத்துக்கொண்டார். பிறகு யாராயிருந்தால் என்ன! ஒரு இரவுப் பயணம் நாம் பாட்டுக்கு இருந்து விட்டுப் போகிறோம். இவரோடு பேச்சு வைத்துக் கொண்டால் தானே வம்பு! என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டார் ஆனால் இப்போது, தான் வெளியே தெரிந்த கோவில் கோபுரத்தைப் பார்த்து கன்னத்தில் போட்டுக் கொண்டதும் எதிரே இருந்த பரந்தாமனார் 'கடிவாள மனசு' என்று சொன்னதும் அவருக்கு கோபம் வந்தது. இருந்தாலும் அமைதியாக எதிரே உட்கார்ந்திருந்த பரந்தாமனாரைப் பார்த்து 'என்ன சொன்னீர்கள்! என்று கேட்டார்.

அதற்கு அந்த மனிதர் அந்த கேள்விக்காகவே காத்திருந்தது போல, 'கடிவாள மனசு' என்றேன்' என்றார்.

''எது!'' கேட்டார் வேதாசலம்.

''உங்கள் மனது''

''ஏன்!''

''இப்போது என்ன செய்தீர்கள்!''

''கோவில் கோபுரம் தெரிந்தது, கன்னத்தில் போட்டுக் கொண்டேன்' தயக்கம் ஏதுமின்றி சொன்னார் வேதாசலம்.

''அது ஏன்?''

''கோபுர தரிசனம், கோடி புண்ணியம் என்று சொல்வார்கள். அதுதான்....''

''புண்ணியமென்றால்!''

''புண்ணியமென்றால், நல்லது என்று வைத்துக்கொள்ளுங்களேன்''

''அப்படி யார் சொன்னது!''

வேதாசலத்திற்கு கோபம் வந்தது. இருந்தாலும் பொறுமையாகச் சொன்னார்

''பெரியவர்கள்''

''எந்த கோபுரத்தைப் பார்த்து கன்னத்தில் போட்டுக் கொண்டாலும் நல்லதா!''

''இல்லை. கோவில் கோபுரத்தைப் பார்த்தால்தான்''

''அது ஏன்!''

''கோவிலில் சாமி இருக்கிறது!''

''எதில்! அதில் உள்ள கற்சிலையிலா?''

மீண்டும் பொங்கி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு வேதாசலம் அமைதியாக ''ஆமாம்'' என்று தலையாட்டினார்.

''அப்படி யார் சொன்னது!'' பரந்தாமனார் விடுவதாயில்லை.

''பெரியவர்கள்''

''அப்படியென்றால் கோவில் என்பது ஏன்? அதில் சாமி எங்கேயிருக்கிறது? அந்த கோவிலின் கோபுரத்தைப் பார்த்துக் கன்னத்தில் அடித்துக் கொண்டால் புண்ணியம், அதாவது நல்லது: இதெல்லாம் பெரியவர்கள் உங்களுக்கு சொன்னது, நீங்களே அனுபவித்து அறியாதது. அப்படித்தானே!''

''வேதாசலம் சிறிது நேரம் பேசாமலிருந்தார். பிறகு அமைதியாகச் சொன்னார். 'உண்மைதான்' இதெல்லாம் எனக்கு பெரியவர்கள் சொல்லித்தான் தெரியும்.''

''பரந்தாமனார் அதைக் கேட்டு வெற்றிப் புன்னகை பூத்தார். ''இதைத்தான் நான் கடிவாள மனசு என்றேன்''.

வேதாசலம் புரியாமல் விழிப்பது போல் தோன்றவே அவரே மேலும்தொடர்ந்தார்.

''தான் உணர்ந்து அறிந்து கொள்ளாமல் மற்றவர்கள் சொல்படி கண்மூடித்தனமாக அப்படியே அதன்படி நடந்து கொள்பவர்களின் அறிவை ஆங்கிலத்தில் 'கண்டிஷன்ட் மைண்ட்' என்பார்கள். அதைத்தான் தமிழில் கடிவாள மனசு என்று சொல்வது. அதாவது குதிரைக்குக்கடிவாளம் போடப்பட்டால் அது தான் விரும்பும் திசைக்கு திரும்ப முடியாதல்லவா! அதை மாதிரி சொல்லப்படும் எதையும், ஏன், எதற்கு என்று கேள்வி கேட்காமல் அப்படியே உண்மையென ஏற்றுக் கொள்ளும் உங்களைப் போன்றவர்களை நான் கடிவாள மனசுக்காரர்கள் என்று சொல்வது.'' உரத்த குரலில் இதைச் சொல்லிவிட்டு பெருமையுடன வேதாசலத்தின் முகத்தைப்பார்த்தார் பரந்தாமனார்.

வேதாசலம் அதற்கு பதில் ஒன்றும் சொல்லாதது பரந்தாமனாருக்கு ஏமாற்றமாக இருந்தது. அவர்களிடையே சிறிது நேரம் அமைதி நிலவியது.

ரயில் ஒரு பெரிய ஸ்டேஷனில் நின்றது. பரந்தாமனாருக்கு சாப்பாடு வந்தது. வேதாசலம் தன் மனைவி கொடுத்தனுப்பிய பொட்டலத்தைப் பிரித்து சாப்பிட்டார். பரந்தாமனார் சாப்பிட்டுவிட்டு கைகளை கழுவிக் கொண்டு 'ஏவ்' என ஏப்பம் விட்டுக்கொண்டு தன் இடத்தில் உட்கார்ந்து கொண்டார்.

''சரியான கடிவாள மனசு''

வேதாசலம் உதிர்த்த அந்த வார்த்தைகளைக் கேட்டு பரந்தாமனார் துணுக்குற்றார்.

''என்ன, என்ன சொன்னீர்கள்!''
''கடிவாள மனசுன்னு சொன்னேன்''
''யாருக்கு!''
''உங்களுக்குத்தான்.
''எனக்கா!''

''ஆமாம் யோசித்துப் பார்த்தேன். நாமாக எதையும் ஆராய்ந்து பார்க்காமல் பெரியோர்கள் சொன்னதை அப்படியே ஏற்றுக் கொள்வது ''கண்டிஷன்ட் மைண்ட்'' அதாவது ''கடிவாள மனசு''. அதன் செயல் என்று சொன்னீர்களே! அதை யோசித்துப் பார்த்தேன். இப்போது நீங்கள் சாப்பிட்டீர்கள் பாருங்கள்! முறைப்படுத்தி அதாவது முதலில் சாம்பார், பிறகு ரசம். அதன் பிறகு மோர் என்று' அதை யார் சொல்லிக் கொடுத்திருப்பார்கள் என்று நினைத்துப் பார்த்தேன். உங்களுக்கு சிறு வயதிலிருந்தே பெரியவர்கள். அப்படிச் சொல்லிக்கொடுத்திருக்க வேண்டும், நீங்களாக ஆராய்ச்சி செய்து முதலில் ரசம் சோறு சாப்பிட்டு, பிறகு மோர் சோறு சாப்பிட்டு அதன் பிறகு சாம்பார் சோறு சாப்பிட்டுப் பார்த்து, அப்புறம் அந்த முறை சரியில்லை யென்று உணர்ந்து இந்த வரிசையில் சாப்பிட ஆரம்பித்திருக்க மாட்டீர்களென்று தோன்றியது. ஆகவே நீங்கள் கணித்தபடி உங்களுககும் கடிவாள மனசு என எனக்குப் பட்டது. அதுதான் சொன்னேன்.''

அதைக் கேட்ட பரந்தாமனார்துள்ளினார்.

''என்ன உளறுகிறீர்? சாப்பாடு என்பது அடிப்படை விஷயம்...''

பரந்தாமனார் முடிக்கவில்லை. வேதாசலம் குறுக்கிட்டார். ''தயவு செய்து உளறல் கிளறல் என்று தரக்குறைவாகப் பேசாதீர்கள். மற்றவர் உணர்வுகளை மதிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்கு சாப்பாடு மட்டும் அடிப்படை. எனக்கு ஆன்மீகமும் கூட.

பரந்தாமனார் அதற்கு பதில் ஒன்றும் சொல்லவில்லை. சிறிது நேரம் ரயில் ஜன்னல் வழியே இலக்கு ஏதுமில்லாமல் பார்த்தபடி இருந்தார். பிறகு எழுந்து ''எனக்கு தூக்கம் வருகிறது'' என்று சொல்லிக் கொண்டு மேல் பர்த்தில் தன் படுக்கையை விரித்தார்.

---

# ஸ்ரீ சாயாவன குமாரர் ஸ்கந்த சஷ்டி விழா

குருகுகன், திருச்சாய்க்காடு

பூம்புகார் சாயாவனம் திருக்கோயிலில் எழுந்தருளி வீற்றிருக்கும் செந்திலாண்டவனாகிய வில்லேந்திய வேலவ சம்காரமூர்த்திக்கு மகாசஷ்டி பெருவிழா தாது ஆண்டு ஐப்பசி மாதம் 26-ந் தேதி திங்கள் முதல் கார்த்திகை 1-ந் தேதி சனி வரை (நவம்பர் 11 முதல் 16 வரை) திருவருள் முன்னிற்க சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீ சம்காரமூர்த்திக்கு ஸ்கந்தசஷ்டி விழாவில் ஆறு நாட்களில் தினமும் காலையில் அபிஷேக, அலங்கார நைவேத்ய ஆராதனைகள் நடைபெற்றன.

மகா ஸ்கந்தசஷ்டி (16-11-96) அன்று காலையில் சிறப்பாக அபிஷேகமும் அலங்காரமும் நைவேத்ய, தூப, தீபாராதனைகளும் மாலையில் சிறப்பாகபெருமான் திருக்கோயில் பிரகார உற்சவமும் நடைபெற்றது.

கார்த்திகை 1-ம் தேதி குமார சஷ்டி அன்று இரவு சகஸ்ரநாம திரிசதி அஷ்டோத்ர அர்ச்சனை நடைபெற்றன.



சாயாவனம்—ஸ்தல வரலாறு

குறிப்பு: சாயாவனம் சீர்காழியிலிருந்து 16.கி.மீ.தூரத்திலும் மயிலாடு துறையிலிருந்து 19. கி.மீ. தூரத்திலும் பூம்புகார் நகருக்கு முன் 3 கி.மீ. தூரத்திலும் உள்ளது. பேருந்து வசதி உள்ளது.

சுவேதாரண்யம் - திருவெண்காடு, பஞ்சநதம்-திருவையாறு, கௌரி மாயூரம்-மயிலாடுதுறை, மத்தியார்ச்சுனம்-திருவிடைமருதூர், சாயாவனம் - திருச்சாய்க்காடு, ஸ்ரீவாஞ்சியம் ஆகிய திருக்கோயில்கள் காசிக்கு சமமான ஆறு தலங்களாகும். எமவாதனை இல்லாத தலங்களாகும்.

பல்லவவனம், சாயாவனம், பிருந்தாவனம், முல்லைவனம், சுவேதவனம், ஆரண்ய வனம், யோகவனம் இவற்றில் இத்தலம் ஒன்றாகும்.

காவேரிப்பூம்பட்டினம் முற்கால-சங்க கால சோழர்களின் தலைநகரமாயும் துறைமுகபட்டினமாயும் விளங்கிய பெருமை உடையது. புகார், பூம்புகார், காவேரிப்பூம்பட்டினம் என்று சிறப்புடன் சங்க இலக்கியங்களிலும், சிலப்பதிகாரம், மணிமேகலை காவியங்களிலும் போற்றப்படும் நகரம். புகார் நகரக் காவல் தெய்வம் சம்பாதி அம்மன்கோயிலும் சிலப்பதிகாரம் கூறும் பொய்யுரைத்து சூளுரைத்தவரை விழுங்கிடும் ஆண், பெண்



குன்றத்தூர் சேக்கிழார் விழாவின் போது தெய்வச் சேக்கிழார் திருவீதி வலம்வந்த திருக்காட்சி.

பூதங்களின் உருவங்களும் சாயாவனம் கோயிலருகே இன்றும் உள்ளது.

சாயாவனம் சுயம்புலிங்க தலம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஐயடிகள் காடவர்கோன் போற்றிய தலம். உபமன்யு முனிவர் பூசித்த தலம், தேவேந்திரன் அவரது வாகனமாகிய ஐராவதம் பூசித்த தலம். ஐராவதத் தீர்த்தம் உள்ளது. சாயாவனம் தலவிருட்சம் தேவலோக அபூர்வ விருட்சமாகும். இயற்பகை நாயனார் முக்தி பெற்ற தலம். பட்டினத்தார் போற்றிய தலம்.

திருப்புகழில் அருணகிரியார், 'கம்புலாவிய காவேரி சங்கமுகம்' என்று போற்றுகிறார். (கம்பு-சங்கு) தை, ஆடி அமாவாசை தினங்களில் காவேரி சங்கமத்தில் நீராடுதல் சிறப்பு.

ஸ்ரீகோஷாம்பிக ஸமேத ஸ்ரீஇரத்தின சாயாவனேஸ்வரர் சன்னதிகளின் இடையே மகா மண்டபத்தில் சோமாஸ்கந்த ரூபராய் தெற்கு நோக்கி ஸ்ரீ வில்லேந்திய வேலவர் எழுந்தருளியுள்ளார். ஏறக்குறைய 13-ஆம் நூற்றாண்டில் தமிழக கடற்கரை ஓரமுள்ள கோயில்கள் பல டச்சுக்காரர்களால் கொள்ளையடிக்கப்பட்டது. அப்போது திருச்செந்தூரிலும் கொள்ளையிட்டு ஸ்ரீ ஆறுமுக நயினார் (ஷண்முகர்) ஸ்ரீ குமரவிடங்கர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீ வில்லேந்திய வேலவர் ஆகிய திருமேனிகளைக் கப்பலில் கொண்டு சென்றனர். கடலில் கப்பல் செல்லும்போது பல இன்னல்கள் ஏற்படவே ஷண்முகரைத் திருச்செந்தூர் கடலிலும், வில்லேந்திய வேலவரை பூம்புகார் கடலிலும் எறிந்துவிட்டு சென்றனர். சுமார் 300 ஆண்டுகளாக கடல் நீரில் மூழ்கியிருந்த பெருமான் 19-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பூம்புகார் மீனவர்களால் கடலில் கண்டெடுக்கப்பட்டு, சாயாவனம் திருக்கோயிலில் எழுந்தருளச் செய்யப்பட்டார். தற்போது ஒரு நூற்றாண்டுக் காலமாக பூஜையில் முருகன் விற்றிருக்கிறார்.

திருச்செந்தூரில் சிறப்புமிக்க சூரசம்ஹாரம் செய்து அருள்பாலித்த இப்பெருமான் சாயாவனத்தில் எழுந்தருளி மறக்கருணை இன்றி (நிக்கிரகம்) அறக்கருணை (அநுக்கிரகம்) புரிந்து சாந்த ரூபராய் புன்முறுவல் தவழக் காட்சியளிப்பதைதரிசித்தோர் பெரும்பேறு பெற்றோராவது உறுதி.

வைசாக ஸ்தானக நிலையில்-திரிபங்கம் நின்றவாறு மேல் திருக்கரங்களில் வஜ்ரசக்தி ஏந்தியும், கீழ் திருக்கரங்களில்வேலும், வில்லும் ஏந்தியும் காட்சியளிக்கும் இப்பெருமானின் அழகை எழுதிக்காட்ட இயலாது. முழுதும் அழகிய பெருமானாக விளங்குபவரைத் தரிசித்து அனுபவிக்கலாம்.

மகா ஸ்கந்தசஷ்டி பெருவிழாவில் இப்பெருமானின் அழகையும், சிறப்பையும்கண்டு சேவித்து, பேரானந்த அருள் வாழ்வும் சகல செல்வயோக பெருவாழ்வும் பெற்ற பக்தர்கள் பல்லாயிரவர் ஆவர்.

நீங்களும் ஒருமுறை ஸ்ரீ சாயாவன வில்லேந்திய வேலவரைத் தரிசித்துப் பெருவாழ்வு பெறுவீர்களாக.

# மல்லிகை வனத்து மாண்புடைக் கடவுள்

**சுப. முத்துக்குமாரசுவாமி**

### முன்னுரை

'மூர்த்தி, தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினார்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்று தாயுமானவர் அருளியவாறு இறைவன் மூர்த்தியாகவும், தலமாகவும், தீர்த்தமாகவும் விளங்குகிறான். எல்லாமாய் எதிலுமாய் வியாபித்துள்ள இறைவனுக்கு தனி வடிவம் கொடுத்து ஆலயங்களில் வைத்து வழிபடுவது என்பது பல விதமான சிந்தனைகளை ஒரு நிலைப்படுத்தி ஓரிடத்தில் எண்ணத்தை செலுத்துவதைக் குறிக்கும் என்பது முன்னோர்கள் கண்ட வழி. எங்குமே பரந்து விரிந்திருக்கும் கடவுள் சக்தியை விக்ரகத்தில் ஒருநிலைப்படுத்தி, எங்கும்அலைபாயும் மனதை ஒருநிலைப்படுத்தி அந்த விக்ரகம் நோக்கி செலுத்துவதேயோகம் மற்றும் தியானம்.

அவ்வாறு வழிபடுவதற்காக ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு ஊரிலும் ஏற்படுத்தப்பட்ட திருக்கோயில்கள் தமிழகத்தில் எண்ணிலடங்காதவை. ஒவ்வொரு திருக்கோயிலின் மூர்த்திகளுக்கும் ஒவ்வொரு தனிச்சிறப்பு உண்டு. சமயக்குரவர்கள் அருளாளர்கள் இந்த சிறப்பை உணர்ந்து, தமது தேவாரம், திருவாசகம், திருப்புகழ் போன்ற இலக்கியங்கள் மூலம் நமக்கும் உணர்த்துகின்றனர். இவ்வகையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளும், திருஞானசம்பந்தப் பெருமானும் அருளிச் செய்தவகையில் 'மல்லிகைவனத்து மாண்புடைக்கடவுள்' பற்றி சிந்திக்க முற்படுவோம்.

### அமைவிடம்

தமிழகத்தின் வங்கக்கடலோரம், நாகப்பட்டினம் மாவட்டத்தில் திருவாருருக்குக் கிழக்கே 20 கிலோமீட்டர் தொலைவிலும், நாகப்பட்டினத்திற்கு மேற்கே 5 கிலோமீட்டர் தொலைவிலும் அமையப் பெற்ற திருத்தலம். மல்லிகைவனம், முல்லைவனம், வில்வவனம் வேதவனம், கடம்பவனம், தில்லைவனம் என அழைக்கப்பட்டு பின்னாலில் வசிட்ட மகரிசியால் திருச்சிக்கல் என்று பெயரிடப்பட்டு இன்றளவும் புகழோடு விளங்குவது சிக்கல் திருத்தலமாகும்.

### தலவரலாறு

முன்னொரு காலத்தில் காமதேனுப் பசுவானது சாபம்பெற்று புலி முகத்தைக் கொண்டு வருந்தி பின்னர் மல்லிகாரண்யம் எனப்படும் இத்தலத்திற்கு வருகை போந்து ஆதிப்பரம்பொருளாம் சிவனை வழிபடசாபம் நீங்கியது. அம்மகிழ்வின் காரணமாக தனது மடியிலிருந்த பாலினைச் சொரிய அது தேங்கி மல்லிகை வனத்திடையே குளமாகத் தேங்கி அதில் வெண்ணையும் திரண்டது. வசிட்ட மகரிசி பல தலங்களுக்கும் சென்றுவிட்டு, இத்தலத்திற்கு வந்தபோது தேங்கிக்கிடந்த பாலையும் திரண்டிருந்த வெண்ணெயையும் கண்ணுற்று, அந்த வெண்ணையை எடுத்து சிவலிங்கமாக உருவாக்கி பூசனை செய்தனர். பூசனை நிறைவெய்தியபின்னே, வாகனம் செய்ய அவ்லிங்கத்தை அகற்ற முயன்றபோது இலிங்கமானது 'கல்' என்று சிக்கிக் கொண்டு விட்டமையால், இறைவனுக்கு இத்தலத்தில் உறைய திருவுளம் உள்ளது என்பதை உணர்ந்து, இத்தலத்திற்கு 'சிக்கல்' எனவும் பெருமானுக்கு 'வெண்ணெய்ப் பெருமான்' எனவும் திருநாமமிட்டு வழிபட்டார். வெண்ணெய்ப்பெருமான் என்பதே வடமொழியில் 'நவநீதேஸ்வரர்' என்றும் வழங்கலாயிற்று.

### திருப்பணி

வசிட்ட மகரிசியால் உருவாக்கப்பட்டதால் இத்தலத்து இறைவன் மற்றைய திருத்தலத்து மூர்த்திகளைவிடசிறப்புடையவன். இவ்விறைவனை விசுவாமித்திரர். நாரதர், அகத்தியர், கார்த்தியாயனர் போன்ற முனிவர்கள் வழிபட்டு அருள்பெற்றுள்ளனர். இணையிலா சிறப்பு பெற்ற இப்பெருமான்மீது அளப்பரிய அன்புகொண்டு இவ்விறைவனுக்கு கி.பி. 4-ம் நூற்றாண்டில் சோழ அரசன் கோச்செங்கட்சோழன் மாடக்கோயில்கட்டிவழிபட்டான். பெருமானின் திருவுளக்கருணையினாலே அவனே பின்னாளில் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராக போற்றப்பட்டான். முசுகுந்த சக்ரவர்த்தியும் இவ்விறைவனை வழிபட்டு தனது கொலைப்பாவம் நீங்கப்பெற்றதாகவும் வரலாறு. கோச்செங்கட்சோழனால் கட்டப்பட்ட இத்திருக்கோயிலுக்கு கி.பி. 1899-ஆம் ஆண்டு முதல் ஏறத்தாழ 35ஆண்டு காலம் அறங்காவலராக இருந்து அருளாட்சி செய்த பசும்பொன்மாவட்டம் ஆ. தெக்கூர் திருகருமுத்து. அழகப்ப செட்டியார் அவர்கள் தமது சொந்தப் பொருளில் திருப்பணி செய்தும், திருக்கோயிலுக்கு முன்பாக மிகப்பெரிய திருமண மண்டபம் கட்டியும், திருக்கோயிலைச்சுற்றி மிக உயரமான மதிற்சுவர் கட்டி



யும் பெருமானின் அருளைப் பெற்றார்கள். பெருமானுக்கு அணிவிக்கப்படும் ஆபரணங்கள் பெருமான் பவனிவரும் தங்க வாகனங்கள் போன்று செட்டியார் அவர்கள் செய்த அறப்பணிகள் ஏராளம்:

**இதர மூர்த்திகள்**

வெண்ணெய்ப் பெருமானின் நாயகி இத்திருத்தலத்தில் வேல்நெடுங்கண்ணி என்னும் திருநாமத்தோடு எழுந்தருளி அருள்பாலிக்கிறாள். இந்த அம்மைக்கும் பெரும் சிறப்புண்டு. சூரபதுமனை வதம் செய்ய அருள்மிகு முருகனுக்கு தனது சக்தி முழுவதையும் வேலாக வடித்து அளித்தமையால் 'வேல்நெடுங்கண்ணி' என இந்த அம்மைக்கு திருநாமம் வழங்கலாயிற்று.

அருள்மிகு முருகப்பெருமானது அவதார நோக்கமான சூரவதத்திற்கு இந்தத் திருத்தலத்தில் தான் அன்னை வேல்நெடுங்கண்ணியிடம் 'சக்திவேல்' பெற்று திருச்செந்தூரில் சூரவதம் செய்ததாக வரலாறு. வேல்தரும் நாளில் அன்னை முழுதும் வெள்ளை ஆடை அணிந்து காட்சி தருவதோடு அன்றைக்கு மட்டும் அம்பாளின் அருட்பிரசாதம் திருநீறுதான். குங்குமம் வழங்கப்படுவதில்லை. சிறப்புமிகு ஈசனும் சக்திக்கு பார்வதியும் இருப்பதனால் இங்குள்ள முருகனும் எங்குமில்லாப் புகழுடன் அருள் பாலிக்கிறான். இத்திருத்தலத்து முருகனுக்கு 'சிங்காரவேலவன்' என்று திருநாமம். கந்தர் சஷ்டிப்பெருவிழாவில் சூரசம்காரத்திற்குமுதல் நாள் அதாவது ஐந்தாம் திருநாள் அருள்மிகு சிங்காரவேலவர் 'சக்திவேல்' வாங்குவதும், அதன் பின்னே மானிடர்க்கு வியர்ப்பது போன்று சிங்காரவேலவர் வியர்வை பொழிய அருட்காட்சி தருவதும் வேறெங்குமே காண முடியாத அற்புதமானதும் அசிசயமானதும் ஆகும். 'முக்கட்புராதியொடு' எனத்துவங்கும் சிதம்பர முனிவர் பிள்ளைத்தமிழும், 'புலவரைட்சிக்குந்தாருவேமது' எனத் துவங்கும் அருணகிரிநாதரின் திருப்புகழும் இத்தலத்து சிங்காரவேலவரின் பெருமைகளை நமக்கு தெளிவாய் உணர்த்தும்.

**முடிவுரை**

'வேலவொண் கண்ணியினாளையொர் பாகன்
வெண்ணெய்ப்பிரான்
பாலவண்ணம் கழல் ஏத்த நம் பாவம்
பறையுமே'

என்ற திருஞானசம்பந்தப் பெருமான் வாக்கின் படி இத்திருத்தலத்துக்கு வருகைபோந்து சிவலிங்கத் திருமேனி உருவான பாற்குளத்தில் நீராடி பால்வெண்ணை நாதரையும் அம்பிகையையும், வியர்வை சிந்தும் 'வேலவன்' 'சிக்கலை தீர்த்து வைக்கும் ஜெகம்புகழ் சிக்கல் சிங்கார வேலவன்' என்று பக்தர்கள் கொண்டாடி மகிழும் அருள்மிகு சிங்காரவேலனையும் தரிசிப்பது நம் பாவங்களை அழிக்கும் வழியாகும். வாழ்வின் சிக்கல்கள் தீர வளமை சேர சிக்கல் திருத்தலம் செல்வோம்.



# வைதேவியும் வாயுபுத்திரனும்!

புலவர் ஏ. பரந்தாம ராமானுஜ தாசர், எம்.ஏ.,பி.எட்.,

இராமாயணப் பாத்திரங்களுள் அநுமன் ஓர் முக்கிய பாத்திரமாவான். கிஷ்கிந்தா காண்டத்திலே அறிமுகப்படுத்தப்படும் அநுமன் அறிவிற் சிறந்தவன். ஆற்றல்மிக்கவன். சாத்திரங் கற்றவன். வீரம் மிக்கவன். சாதுர்யம் மிக்கவன். இனிமையாகப் பேசக் கூடியவன் என்று கம்பரால் இராமர் வாயிலாகப்போற்றப்படுகிறான். இன்சொல்லின் செல்வன் என்று பாராட்டப்படுகிறான்.

இராம இலக்குவனர்களை சுக்ரீவனுக்கு நண்பர்களாக்கிய பெருமை அனுமனையே சாரும். இராமபிரானுக்கும் சுக்ரீவனுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையால் சீதையைத் தேடும் பணியில் தலை சிறந்தவன். இராமன் சொல்லியனுப்பிய அடையாளங்களைக் கேட்டுக்கொண்டும், கணையாழியைப் பெற்றுக் கொண்டும் இலங்கை நோக்கி வானில் பறந்து இலங்கையை அடைந்தான். இலங்கையின் காவல் தெய்வத்தை வென்று மாறுவேடத்தில் இரவில் இராவணன் அரண்மனையெல்லாம் சுற்றித் தேடினான். ஆனால் சீதையைக் கண்டுபிடிக்க முடியாமல் அசோகவனத்தை அடைந்தான். ஒரு மரத்தடியில் பெண் ஒருத்தி சோகமாக அமர்ந்திருந்ததைக் கண்டு அங்கு சென்றான். அப்போது ஒரு அரக்கன் சம்பிரமாக வருவதைக் கண்டு மரத்தின் மீது அமர்ந்து கொண்டு நடப்பதைக் கூர்ந்து கவனித்தான். வந்தவன் அப்பெண்ணிடம் தகாத முறையில் பேசியதையும் அதற்கு அப்பெண் கடுமையாகப் பேசியதையும் கண்டு அரக்கன் இராவணன் என்பதையும் அப்பெண் சீதை என்பதையும் உணர்ந்துமிக்க கோபமும் வருத்தமும் கொண்டான் அநுமன்.

சற்று நேரத்திற்கெல்லாம் சீதை தன் தலை முடியை மரக்கிளையில் கட்டி கழுத்தில் சுருக்கிட்டுத் தற்கொலைக்கு முயல்றாள். இதைக் கண்ட அநுமன் திடுக்கிட்டு கீழே குதித்தான். இராமநாமம் பலமுறை சொன்னான். இராம நாமத்தைக் கேட்டவுடன் சற்றுத் தயங்கினாள். தற்கொலை முயற்சியை விட்டாள். என்றாலும் இதுவும் அரக்க மாயையாக இருக்குமோ என்று சந்தேகித்தாள்.

சீதை : 'யாரடா குரங்கே நீ யார்! உண்மையைச் சொல். இராவணன் அனுப்பிய அரக்கனோ? இங்கே நில்லாது சென்று விடு''

அநுமன் : தாயே' நீர் என்னைச் சந்தேகப்படாதீர். நான் உண்மையிலேயே இராம தூதன்தான். என் பெயர் அநுமன். நான் அஞ்சனா தேவிக்கு வாயு பகவான் அருளால் புதல்வனாகத்தோன்றியவன். கிஷ்கிந்தையிலிருந்து வருகின்றேன். இராமபிரான் அங்குதான் உள்ளார். நீங்கள் இருக்கும் இடம் தெரியாமல் சோகமே வடிவாக உயிரற்ற உடல்போல் துவண்டு போய் உள்ளார். நீர் சுழற்றி எறிந்த ஆபரண மூட்டையைக் கண்டு தென் திசையில் இலங்கையின் அரசனான இராவணன்தான உங்களை எடுத்து வந்திருக்க முடியும் என்ற ஊகித்து இங்கு வந்தேன். உங்களைக் கண்டேன்.

சீதை : நான் என் ஆபரணங்களைக் கழற்றி மூட்டை கட்டி எறிந்தது உண்மை தான். அது உங்கள் கையில்தான் கிடைத்ததா? அவற்றையெல்லாம் என் ஐயன் இராமபிரான் பார்த்தாரா! சொல் சொல் அனுமனே! ஆனால் ஒரு சந்தேகம். இவ்வளவு சிறிய வடிவில் உள்ள குரங்காகிய நீ எவ்வாறு கிஷ்கிந்தையிலிருந்து கடல் கடந்து வந்தாய். மற்றும் காவல் உள்ள இந்நகரத்தில் நுழைந்து இங்கு எப்படி வந்து சேர்ந்தாய்? அதை நினைத்தால் என்னால் நம்பமுடியவில்லை. நீ எனது இராமபிரானின் தூதுவன் என்பது உண்மையானால் உன் உண்மையான உருவத்தைக்காட்டுவாயா?

அநுமன் : தாயே! அதை நிரூபிக்கின்றேன். இதோ என் உருவைக் காணுங்கள். (அநுமன் விண்ணை முட்டும் அளவிற்கு தன் உருவத்தைப் பெருக்கிக் காட்டினார். அவன் மார்பகத்தின் மீது மேகங்கள் தவழ்ந்தன. அவன் முடி மீது விண்மீன்கள் ஒளி வீசின. இதைக் கண்ட சீதை பயந்தே விட்டாள்.) இந்த உருவம் கொண்டே கடலில் கடந்து வந்தேன். இலங்கைக் காவல் தெய்வத்தை வென்று சிறிய வடிவில் இங்கு வந்தேன்.

சீதை : அநுமனே போதும்—போதும். உன் உருவை சுருக்கிக்கொள். அரக்கர்கள் யாரேனும் கண்டால் ஆபத்து. (உடனே அநுமன் தன் உருவைச் சுருக்கிக்கொண்டு பழைய வடிவில் பணிந்து நின்றான்.)

அநுமன் : தாயே இப்போதாவது என்னை நம்பினீர்களே? மிக்க மகிழ்ச்சி. என்னை வாழ்த்துங்கள் தாயே!

சீதை . அநுமனே! பல்லாண்டு பல் லாண்டு வாழ்வாயாக. பல வெற்றிகளைப் பெறுவாயாக. ஏன் என் ஐயன் இன்னும் என்னை வந்து மீட்கவில்லை. இந்த இராவண னாலும் இந்த அரக்கியர்களாலும் 'செந் நாய்களின் இடையே அகப்பட்ட மான் போல' நான் படும் துன்பத்தை நீயே நேரில் பார்த் தாய் அல்லவா! இன்னும் எத்தனைக் காலம் நான் இப்படி துன்பப்பட வேண்டுமோ! தெரியவில்லை (இவ்வாறு சீதை உள்ளமும் உடலும் தளர்ந்து அசோகமரத்தின் மீது சாய்ந்தாள்) அதைக் கண்ட அநுமன் பதை பதைத்தான்).

அநுமன் : தாயே! மனம் தளர வேண் டாம். இனி வருந்த வேண்டாம். நீங்கள் இருக்கும் இடம் தெரியாமல் இராமபிரான் படும் துயரம் சொல்ல முடியாது. நான் சென்று, உடனே இராம பிரானை அழைத்து வந்து இராவணனை அழித்து உம்மை மீட்கச் செய்கின்றேன். இது உறுதி.

சீதை : அநுமனே! என் ஐயன் இராம பிரான் எனக்குச் சொன்ன செய்திகளைக் கொண்டுதான் நான் உம்மை முழுமையாக நம்ப முடியும். சொல் சொல்.

அநுமன் : தாயே இந்த அரக்கர்கள் சூழ்ச்சியைக் கண்டு மனம் தளர்ந்துள்ள நீங்கள் அடியேனை நம்புவதற்கென்றே பல அடையாள நிகழ்ச்சிகளைச் சொல்ல அனுப்பி யுள்ளார். அவற்றைக் கூறுகின்றேன் கேளுங்கள்.

சீதை : வாயு புத்திரனே கூறுங்கள். அவற்றைக் கேட்க மிகவும் ஆவலாகஉள்ளேன்.

அநுமன் : 'நெறிந்த கருங்குழல்
மடவாய் நின்னடியேன் விண்ணப்பம்
செறிந்தமண்முடிச் சனசன் சிலையிறுத்து
நினைக் கொணர்ந்த
தறிந்து அரசுகளைக் கட்ட
அருந்தவத்தோன் இடைவிலங்க
செறிந்த சிலைகொடு தவத்தைச்
சிதைத்ததுவுமோர் அடையாளம்.''

தாயே உமது அடியவனாகிய யான் கூறும் அடையாளத்தைக் கேட்பீராக. இரத் தினங்கள் பதிக்கப்பட்ட முடிகளை யணிந்த உமது தந்தை சனக மகாராசன் சபையில் உம்முடன் பிறந்த வில்லை ஒடித்து உம்மைத் திருமணம் கொண்டு அயோத்திக்கு இராம பிரான் திரும்புகையில், இராமபிரானை எதிர்த்த இருபத்தேழு தலைமுறை அரசர் களைக் கொன்று குவித்த பரசுராமனது வில்லை வாங்கி, வளைத்து அம்பைப் பூட்டி அந்த அம்புக்கு இலக்காக பரசுமானது தவ வலிமையை அழித்த இராமபிரானது செயலை ஓர் அடையாளமாகக் கூறினார்.

சீதை : வாயு புத்ரரே! நீர் சொன்ன அடையாளத்தைக் கேட்டவுடன் என் மனம் மகிழ்ச்சியடைகிறது. உனது வருகையால் எனக்கு நன்மையுண்டாகட்டும். இன்னும் என்ன அடையாளங்களைக் கூறினார் சொல் லும்.

அநுமன் : 'வாரணிந்த முலைமடவாய்
வைதேவி விண்ணப்பம்
தேரணிந்த அயோத்தி
யர்கோன் பெருந்தேவி கேட்டருளாய்!
கூரணிந்த வேல்வலவன் குகனோடும்
கங்கை தன்னில்
சீரணிந்த தோழமை கொண்டதுமோர்
அடையாளம்''

பெருமைக்குரிய வைதேவியாகிய சீதா தேவியே நீரும் இராமபிரானும் இலக்குவனும் கங்கா நதியைக் கடக்க உதவிய வேடர் தலைவனான குகனோடு நட்பு கொண்டதுவும் ஓர் அடையாளமாகக் கூறி னார் இராமபிரான்.

சீதை : ஆகா! என்னே அருமையான நிகழ்ச்சி. இன்றும் என் கண்முன்னே அக் காட்சியை அழகாகக் காட்டிவிட்டீர். நினைக்க நினைக்க உள்ளம் உருகும் அருமை யான காட்சி. இன்னும் என்ன அடையாளங் களைக் கூறினார் கூறும்.

அநுமன் : எனதருமைத் தாயே! உமது முகத்தில் சிறிதளவு மகிழ்ச்சியைக் காணும் என் உள்ளம் உவக்கின்றது. இன்னும் கூறு கின்றேன் கேளும்.

'மானமரும் மென்நோக்கி
வைதேவீ விண்ணப்பம்
கானமரும் கல்லதர்போய் காடுறைந்த
காலத்து
தேனமரும் பொழிற்சாரல் சித்திரக்
கூடத்திருப்ப
பான்மொழியாய் பரதநம்பீ
பணிந்ததுமோர் அடையாளம்'

சிறியசலனத்தைக் கண்டு மருளக்கூடிய மான் போன்ற குணமுடையஎனது அருமைத் தாயே! கூர்மையான பரற்கற்களையும் முட்களையும் உடைய காடுகளையெல்லாம் கடந்து; நீர் இராமபிரானோடு சித்திரக்கூடமலைச் சார லில் தங்கியிருந்தபோது உங்களை மீண்டும் அயோத்திக்கு அழைத்துச் சென்று இராம பிரானுக்கு முடிசூட்டவிரும்பி சித்திரக் கூடத் திற்கு ஓடோடி வந்து உங்களை பரதநம்பி பணிந்து வேண்டியதும் ஓர் அடையாளமாகக் கூறினார் இராமபிரான்.



வைதேவி : வாயு புத்திரா ! என்னே உருக்கமான காட்சி. பரதனின் பேரன்பும் பணிவும் இன்றும் என்னை மகிழ்விக்கின்றன. அவர் பாதுகையைப் பெற்றுக் கொண்டு பிரிய மனமின்றி உள்ளம் வருந்த வாட்டமுடன் சென்ற காட்சி எனது மனத்தை உருக்குகின்றது. எவ்வாறு உள்ளாரோ என் மைத்துனர் பரதாழ்வார். உம், என் செய்வது.

அநுமன் : தாயே கலங்காதீர். இன்னும் சிறிது நாட்களுள் எனது ஐயன் இராமபிரான் உங்களை மீட்க வந்து விடுவார். இன்னுமோர் அடையாளம் கூறுகின்றேன் கேளும்.

''சித்திரக் கூடத்திருப்பச் சிறுகாக்கை முலை
தீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும்
திரிந்தோடி
வித்தகனே இராமாவோ நின்னபயம்
என்றழைப்ப
அத்திரமே அதன்கண்ணை அறுத்ததுமோர்
அடையாளம்''

சீதா தேவியே சித்திரக் கூடத்தில் ஒரு நாள் இராமபிரான் உமதுதிருமடியில்உறங்கிக் கொண்டிருந்தபோது இந்திரன் மகன் ஜயந்தன் காக்கை உருக்கொண்டு உமது மார் பகத்தைக் கொத்திவிட, பீறிட்டெழுந்த இரத்தம் இராமபிரான் முகத்தில் பட, விழித் தெழுந்த ஐயன் காரணம் கேட்க; நீர் காக்கா சுரனைச் சுட்டிக் காட்ட; கோபித்த ஐயன் அருகிலிருந்த அருகம் பில்லை பிரம்மாஸ்திர மாக காகாசுரன் மீது ஏவி விட; அவ்வம்பு துரத்த, இந்திரன். பிரமன், சிவன் ஆகியவர் களைச் சரணடைந்தும், அவர்களால் காக்க முடியாமையால் மீண்டும் ஓடோடி வந்து உமது திருவடிகளில் விழவும்; நீர் அவன் மீது கருணை கொண்டு, அவனை இராமபிரான் திருவடிகளில் சரணம் அடையும்படிச் செய்ய வும்; ஐயன் இராமபிரான் அவன் செய்த பாபத்திற்கு ஒரு கண்ணின் பார்வையை நீக்கி, சரணாகதி அடைந்ததால் அவன் உயிரைக் காத்து அருள் புரிந்ததும் ஓர் அடையாளம், என்னே உமது கருணை. உமக்குத் தீங்கு செய்த காக்காசுரனுக்கு உயிர் பிச்சை அளித்த உமது அருளுக்கு இணையேதும்உண்டோ?

ஜானகி : ஆகா என்னே வியப்பு இந்த நடுநாயகமான நல்ல நிகழ்ச்சியை எடுத்துக் கூறி, அத்மத் தந்தையான இராமபிரானின் காத்தல் தன்மையையும் தவறுக்கு தண்டனை யளிக்கும் கடமை உணர்வையும் எடுத்துக் கூறினீர். மிக்க மகிழ்ச்சி. இன்னும் என்ன அடையாளம் கூறினார்? அவற்றைக் கூறும் வாயு புத்திரரே !

வாயு புத்திரன் :

''மின்னொத்த நுண்ணிடையாய்மெய்யடியேன்
விண்ணப்பம்
பொன்னொத்த மான் ஒன்று புகுந்தினிது
விளையாட
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்து எம்பிரா
னேக
பின்னே அங்கிலக்குமணன் பிரிந்ததுமோர்
அடையாளம்''

தாயே நீங்கள் கானகத்தில் இருக்கும் போது உங்களைப் பிரிப்பதற்காகச் சூழ்ச்சி செய்த இராவணன் மாரீசனைப் பொன் மானாக உருவெடுத்து உம்முன் விளையாடும் படிச்செய்தான். அந்த மானை உண்மையான

மான் என்று நம்பி நீர் அம்மானைப் பிடித்துத் தரும்படி இராமபிரானை வேண்டினீர். இது மாய மான் என்று கூறியும் கேளாது பிடிவாதம் பிடித்தீர். உம்மீது உள்ள அன்பினால் அம்மானைப் பிடிக்க முயன்றபோது, அது அகப்படாமல் அங்கிருந்து ஓட ஆரம்பிக்க ஐயன் அதைத் தொடர்ந்து துரத்திச் சென்றார். கைக்கு அகப்படாமல் ஓடுவதைக் கண்டு அம்பெய்ய; மாயமானான மாரீசன் இறக்கும்போது; சீதா இலக்குமனா என்று இராமபிரான் குரலில் கத்தியதைக் கேட்ட நீவிர் இராமபிரானுக்கு ஆபத்து என்று கருதி இலக்குமனனை உடனே செல்லும்படிக் கூறினீர். ஆனால் இலக்குமனரோ இராமபிரானுக்கு எந்த ஆபத்தும் வராது. அந்தக் குரல் மாரீசன் குரல். கவலைப்படாதீர் என்று கூறினார். நீர் அவரைப் பழித்துக் கூறப்பாதுகாப்புக்குக் கோடுகிழித்துமனமின்றி பிரியவும் இராவணன் மாறுவேடத்தில் வந்து உம்மைப் பிரித்ததுமோர் அடையாளம்.

வைதேவி: எனதருமைப் புதல்வனே என் மதி கெட்டு, மாயமானை உண்மை மானென்று நம்பி இராமபிரானை நானே பிரியும்படிச் செய்தேன். அதுமட்டுமின்றி உத்தம பாகவதரான எனதருமை மைத்துனரைக் கடுமையான கொடிய வார்த்தைகளால் பேசினேன். எனவே பாகவதஅபசாரம் என்னைச் சில நொடிகளில் பிரித்து இங்கு வந்து இந்த கொடிய அரக்கர்களிடையே ''ஓநாய்களின் இடையே அகப்பட்ட மான் போல' பெரிதும் துன்பப்படுகின்றேன். நான் '' அலைகடலில் அகப்பட்ட துரும்பென '' அல்லலுறுகின்றேன். அநுமனே! இதுவரை வெளிப்படையாக நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினீர். எங்கள் இருவருக்கும் நடந்த அந்தரங்க நிகழ்ச்சிகள் எதையேனும் அடையாளமாகக் கூறினாரா? கூறும்.

அனுமன்: ஆம் தாயே! அந்தரங்கமான ஒரு அடையாளத்தையும் சொல்லியனுப்பியுள்ளார். கூறுகிறேன் கேளும்.

''அல்லியம் பூமலர்க் கோதாய் அடிபணிந்
தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்
கண்மடமானே!
எல்லியம் போதினிதிருத்த இருந்ததோர்
இடவகையில்
மல்லிகை மாமாலை கொண்டு அங்குஆர்த்தது
மோர் அடையாளம்'

தாயே அயோத்தியில் ஒருநாள் இரவு நீங்கள் இருவரும் சதுரங்கம் ஆட இராமபிரான் தோற்க அவரை நீங்கள் மல்லிகை மாலையினால் ஒரு மூகூர்த்த நேரம் கட்டி இருந்தது ஓர் அந்தரங்க அடையாளமாகும். இனியாவது அடியேனை இராம தூதனாக நம்பி உம தாசனாகவும், புதல்வனாகவும் ஏற்றுக் கொள்வீராக.

வைதேவி : வாயுபுத்திரரே இனி எனக்கு எந்த ஐயமும் இல்லை. இந்த இறுதி அடையாளம் என்னை அயோத்திக்கே அழைத்துச் சென்று விட்டது. இனி உம்மைச் சந்தேகிப்பது மிகுந்த பாபமாகும். உன்னை முழுதும் நம்புகின்றேன். நீ எனது பக்தனாவாய். எனது அருமைப் புதல்வனுமாவாய். கவலைப்படாதே எனது ஐயன் எனக்கெந்த பொருளையும் கொடுத்தனுப்பவில்லையா?''!

வாயுபுத்திரன் : கொடுத்தனுப்பியுள்ளார். விலைமதிப்பும் பெருமையும் உயரியதுமான ஒரு பொருளைக் கொடுத்தனுப்பியுள்ளார்.

'மைத்தகுமா மலர்க்குழலாய் வைதேவீ
விண்ணப்பம்
ஒத்தபுகழ் வானரக்கோன் உடலிருந்து
நினைத்தேட
அத்தகுசீர் அயோத்தியர் கோன்அடையாளம்
இவை மொழிந்தான்
இத்தகையால் அடையாளம் ஈதவன்கை
மோதிரமே?' '

தாயே மிதிலை நகரில் உங்கள் திருமணத்தின்போது உமது தந்தை சனக மகாராசன் இராமபிரானுக்குத் திருமணப் பரிசாக கையில் அணிவித்த இந்த மோதிரத்தை அடையாளமாகத் தரும்படிக் கொடுத்து அனுப்பினார் இதோ பெற்றுக் கொள்வீராக:

சீதை : ஆகா என்னே என் ஐயனின் அன்பும் பாசமும் இதையறியாமல் அவர் மீது கோபம் கொண்டிருந்தேனே.

'திக்குநிறை புகழாளன் தீவேள்வி சென்ற
நாள்
மிக்கபெரும் சபைநடுவே வில்லிறுத்தான்
மோதிரம் கண்டு
ஒக்குமால் அடையாளம் அநுமான் என்றுச்சி
மேல்
வைத்துக் கொண்டுகந்தனளால் மலர்க்
குழலாள் சீதையுமே'

அனைத்து உலகத்தாராலும் அனைத்து திசைகளில் வாழ்வோராலும் புகழக்கூடிய எனது தந்தை சனக மகாராஜனின் சபையில் யாராலும் தூக்கியெடுத்து வளைக்க முடியாத வில்லை மிகவும் சுலபமாகத் தூக்கி நிறுத்தி வளைத்து ஒடித்த எனது ஐயன் இராமபிரானுக்கு எனது தந்தை திருமணப் பரிசாக அளிக்கப்பட்ட மோதிரம் இதுவேதான். ஐயமில்லை. இதனை என் உச்சிமேல் வைத்து மகிழ்கின்றேன். எனது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அநுமன் : தாயே இப்போதாவது யான் கூறிய அடையாளங்களை நம்பினீர்களே: மிக்க மகிழ்ச்சி. இனி கவலையற்று இருங்கள். யான் உணவருந்தி பல நாட்களாயின. இந்த சோலையிலுள்ள பழங்களைப் பறித்துத்தின்ன அனுமதிக்க வேண்டும்.

சீதை : மகனே : நீ உன் விருப்பம் போல் உண்டு விரைவில் வந்து விடு. அரக்கர்கள் கண்டால் ஆபத்து.

(அநுமன் அசோகவனத்தில் புகுந்து, பழங்களைப் பறித்துத் தின்றதோடல்லாமல், அசோகவனத்தை அழித்து அரக்கர்களை அடித்துத் துன்புறுத்தினான். பல அரக்கர்களைக் கொன்றான். அரக்கர் பயந்து ஓடிச் சென்று இராவணனிடம் தெரிவித்தனர்.

இராவணன் அனுப்பிய பல அரக்கர்கள் அழிய, இறுதியில் இந்திரஜித் வந்து அநுமனை பிரம் மாஸ்திரத்தால் சட்டி அரச சபைக்கு அழைத்துச் சென்றான். இராவணனைக் காண இது தான தக்க வாய்ப்பு என்றிருந்து அநுமனும் அமைதியாகச் சென்றான. இராவணன் 'யாரடா குரங்கே? 'நீ எங்கு வந்தாய்? ஏன் அசோகவனத்தை அழித்து அரக்கர்களைக் கொன்றாய்!' என்று கேட்டான். அநுமன் தான் இராமதூதன் எனறு கூறி, சீதையை இராமபிரானிடம் ஒப்படைத்து, மன்னிப்புக் கேட்டு, பிழைத்துப்போகும்படியும் கூறினான். இதைக் கேட்டு இராவணன் கனலெனக் கொதித்தான். தூதுவனுக்குத் தரவேண்டிய மரியாதையைத் தராமல் அநுமனின் வாலில் துணியைச்சுற்றி, எண்ணெய் ஊற்றி, தீயிடும் படி ஆணையிட்டான். இந்த செய்தி சீதைக்கு எட்டியது. சீதை அக்னி பகவானை நினைத்து அநுமனுக்கு யாதும் தீங்கு செய்ய வேண்டாம் என்று வேண்டினாள். அநுமன் வாலில் வைத்த தீயினால் இலங்கைக்குத் தீ மூட்டினான். இலங்கையில் அசோகவனம் தவிர மற் இடங்களிலெல்லாம் தீ பற்றி இலங்கை எரிந்து கொண்டிருந்தது. இராவணன் முதலாக இலங்கைவாழ் அரக்கர்கள் அனைவரும் ஆச்சரியப்பட்டு அல்லலுற்றனர். அநுமன் கடலில் தன் வாலில் ஏற்பட்ட தீயை அணைத்து, சீதையின் முன்னே வந்து வணங்கி நின்றான்.

சீதை : அநுமனே என்ன காரியம் செய்து விட்டாய். தனியாளாக வந்து, இத்தகைய பெரும் அழிவினைச் செய்து விட்டாயே இனியும் நீ இங்கிருந்தால் உனக்குப் பெரும் துன்பம் உண்டாகும். நீ உடனே புறப்படு. என் ஐயன் இன்னும் ஒரு மாத காலத்திற்குள் என்னை வந்து மீட்கவில்லை யென்றால், நான் உயிரை மாய்த்துக் கொள்வேன். எனக்குரிய இறுதிக் கடனை கங்கைக் கரையில் செய்துவிடச் சொல். இதோ என் சூடாமணியைத் தருகின்றேன். இதைப் பத்திரமாக எடுத்துச் சென்று என் ஐயனிடம் கொடுக்கவும். உனக்கு வழியில் எந்தவித இடையூறும் உண்டாகாமல் பயணம் நன்கு அமையட்டும். நீ என்றும் சிரஞ்சீவியாக வாழ்வாயாக சென்று வா.

அநுமன்: தாயே உம்மை இந்த நிலையில், இந்த அரக்கர்களிடம் விட்டு எவ்வாறு செல்வேன். என் மனம் நிலை கலங்குகிறது அம்மா. உங்களை என் தோளின் மேல் எடுத்துச் செல்ல எண்ணுகின்றேன். அநுமதி தாருங்கள் அம்மா.

சீதை : அநுமனே என்னே உன் அன்பின் மிகுதி. அன்பின் மிகுதியால் உன் புத்தியும் கலங்கி விட்டதோ? பசுவுக்குக் கன்றைப் போல, நீ எனக்குப் புதல்வனே ஆனாலும் நீ எண்ணியது சரியன்று. இராவணன்தான் திருட்டுத்தனமாக என்னை எடுத்து வந்தான் என்றால் நீயும் அப்படி நினைக்கலாமா! அது உனது அன்புக்கு அழகல்லவே அது இராமபிரான் வீரத்துக்கும் இழுக்காகும். என்னால் இராவணனைச் சுட்டெரிக்க முடியும். ஐயன் புகழுக்கு இழுக்காகும் என்று எண்ணித்தான் இவ்வளவு துன்பங்களையும் பொறுத்துக்கொண்டிருக்கின்றேன். எனவே அந்த எண்ணத்தை விட்டு சீக்கிரமே புறப்படு

அநுமன் : அன்பின் மிகுதியாலும், உங்கள் துயரத்தைக் காண சகிக்க முடியாமலும் அவ்வாறு எண்ணினேன் என்னை மன்னித்து விடுங்கள். வாழ்த்துங்கள். அடியேன் இதோ இப்போதே புறப்படுகின்றேன். இராமபிரானை அடைந்து, உமது நிலையைக் கூறி நீர் சொன்னபடி ஒரு மாத காலத்திற்குள் இலங்கை மீதுபடையெடுத்து, இராவணனைக் கொன்று உம்மை மீட்போம். இது உறுதி தாயே வருகின்றேன். ராம் ராம் ஜெயராம்.

(இராம நாமத்தைச் சொல்லிய வண்ணம் தனது விசுவரூபத்துடன் புறப்பட்ட அநுமன், இராமனை அடைந்து, 'கண்டேன் சீதையை' என்று கூறி சீதை தந்த சூடாமணியை இராமபிரானிடம் தந்து வணங்கி நின்றான். நல்ல செய்தி கொண்டு வந்த அநுமனைக் கட்டித் தழுவி ஆனந்தமடைந்தான் இராமபிரான். பின் வானர வீரர்களுடன் படையெடுத்துச் சென்று, இராவணனைக் கொன்று, சீதையை மீட்டு அயோத்தி சென்று இராம பட்டாபிஷேகத்தை முடித்து சீதா தேவியுடன் மகிழ்ந்திருந்தான் இராமபிரான்.

அநுமன் இராம தூதனாகப் புறப்பட்டது முதல் சீதையைக் கண்ட அடையாளங்களைச் சொல்லி, இலங்கைக்குத் தீவைத்தபின் சீதையிடமிருந்து சூடாமணியைப் பெற்றுக் கொண்டு வந்து இராமபிரானிடம் கொடுத்தது வரை சுந்தரகாண்டப் பகுதியைச் சார்ந்த சிறந்ததோர் பகுதியாகும். அநுமனின் வீரமும் நுண்ணறிவும், சாதுர்யமும், பணிவும், அடையாளங்கள் சொன்ன சொல்லாற்றலும் போற்றப் போற்ற உள்ளம் பூரிக்கும். இவ்வரலாற்றைக் கேட்டவரும் படித்தவரும் துன்பங்கள் நீங்கி இன்பம் பெறுவது 'உள்ளங்கை நெல்லிக்கனி' ஆகும். இராமாயணத்தில் சுந்தரகாண்டமே சிறந்த காண்டமாகும். இக்காண்டத்தில்தான் 'சீதையின் ஏற்றம்' சிறப்பிக்கப்படுகிறது. சீதையின் தியாக உள்ளமும், பக்தர்களுக்காக பத்து மாதம் சிறையிலிருந்த பாங்கும் பளிச்சிடுகிறது. இதனால்தான் 'ஸ்ரீராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் கூறுகின்றது'' என்று சீதையின் சிறப்பு கூறப்படுகிறது. 'துயரம் தீர சுந்தரகாண்டம் பாராயணம் செய்' என்று பெரியோர்கள் கூறியுள்ளனர். எனவே நாமும் இந்த அநுமன் தூது அடங்கியசுந்தரகாண்டப்பகுதியைப் படித்துத் துயர் நீங்கி இன்பம் அடைந்து நீடுழி வாழ்வோமாக.

**ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே! சரணம் சரணம் ஹநுமந்தா!**

# எம்பெருமானார் வைபவத்தால் ஏற்பட்ட நன்மைகள்!



நா. வேணுகோபால் நாயக்கர்

### 'செடியாய வல்வினைகள் தீர்க்கும் நெடியான் வேங்கடவன்'

இவனுக்கும் ஒரு வினை ஏற்பட்டது. அதாவது. சென்னி ஓங்கு தண் திருவேங்கட முடையான் 'திருமால் தானா?' என்ற ஐயம் ஏற்பட்டுவிட்டது.

முதலுக்கே மோசம் வந்தது. இராமா நுசரே இந்த வினையிலிருந்து திருவேங்கட வரைக் காப்பாற்றினார். அவனைச் சங்குப் ஆழியும் சூட வைத்தார். இதனால் இவருக்கு 'அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெரு மாள்' என்ற விருதும் ஏற்பட்டது.

இப்பேருபகாரத்திற்காகவே திருவேங் கடத்தையே விட்டுவிட்டு, எம்பெருமானா ருடைய திருவுள்ளத்தையே இருப்பிடமாகக் கொண்டு விட்டான் திருவேங்கடவன்.

அந்த இராமாநுசரே அடியேனது மனதை யும் இருப்பிடமாக்கிக் கொண்டாரே எனக் களிக்கின்றார் அமுதனார்.

'நாறுநறும் பொழில் மாலிரும் சோலை
நம்பிக்கு நான்
நூறுதடாவில் வெண்ணெய்
வாய் நேர்ந்து பராவிவைத்தேன்;
நூறு தடா
நிறைந்த அக்கார அடிசில் சொலனேன்.
ஏறு திருவுடையான் இன்று வந்துஇவை
கொள்ளும் கொலோ?'

என்று வாய்ப்பந்தல் போட்டு விட்டாள் பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவளான ஸ்ரீ ஆண்டாள்.

ஸ்ரீ ஆண்டாள் நிறைவேற்றாத இந்த ஆசையை இராமநுசர் அபகீர்த்தி ஏற்படா வண்ணம் நிறைவேற்றி வைத்தார்.

இதனால் மாலிருஞ்சோலைப் பெரு மாளுக்கு ஏற்பட்டமகிழ்ச்சியில் அவரும் உடை யாரின் உள்ளத்தையே வசமாக்கிக்கொண்டு விட்டார். இத்தகைய உடையவரும் அமுத னாரின் உள்ளத்தில் வந்து உகந்தருளினார்.

பழம் நழுவிப் பாலில் விழவும், அதுவும் நழுவி வாயில் விழுந்த அதிர்ஷ்டம்தான்.

நூற்றெட்டு திவ்விய தேசங்களுள் தலை யாயது திருவரங்கம். போக மண்டபமாம் திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கம். இது பூலோக வைகுண்டமல்லவா. ஸ்ரீவைணவப் பரிபாஷையிலே, 'கோயில்' என்றாலே திரு வரங்கம் பெரிய கோயில் தானே. எண்ணல் அளவில் கணக்கிட்டாலும் திருவரங்கம் என் றால் 'ஒன்று' பெரிய கோயில் என்றால் 'இரண்டு' என்று தானே எண்ணிக்கை இத்திருவரங்கனின் செல்வம்சிதைவுற்றிருந்த காலத்தில் இராமாநுசரல்லவா ஸ்ரீவைணவ உலகின் ஆசாரிய பீடத்தை அங்கரித்துப்பன் னெடும் ஆண்டுகள் 'திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்' என்று உவந்து நித்யவாசம் புரிந்து தென்னரங்கன் செல்வம் முற்றிலும் திருத்தி வைத்தருளினார்.

இராமாநுசர் பரமபதத்திற்கு எழுந்த ருளிய பிறகும் அவரது திருமேனியைத் திரு வரங்கனின் பிரிவு ஏற்படா வண்ணம் அவ ருடைய பெரிய கோயிலின் கண் சந்நிதி படுத் தப்பட்டுள்ளது.

இராமாநுசர் திருச் செவிகளில் 'பொன் னரங்கம்' எனப் புகன்றாலேபோதுமே. மயலே பெருகி, மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி விடு வாரே.

### ஆழ்வார்கள் அடிசூடும் ஆசாரியார்

ஸ்ரீ வைணவ ஆழ்வார்கள் பன்னிருவரை யும் இணைக்கும் சக்தி எது!

அர்ச்சையில் (வணங்கப்படும் திரு உருவ நிலை) மண்டிக் கிடந்தவர்கள் ஆழ்வார்களே. இதுவே அவர்களுடைய பெருமை ஒற்றுமை ஓரே நோக்கு.

ஆழ்வார்கள் திவ்விய சூரிகள். அவர்களுடைய பாடல்களோ திவ்வியப் பிரபந்தங்கள். அவர்களால் பாடல் பெற்ற திருத்தலங்களோ திவ்வியதேசங்கள். எல்லாம் திவ்வியமான ஆழ்வார்களின் திருவாக்கால் அருளிச் செய்யப்பட்டன.

ஆழ்வார்கள் : உலகம் ஏத்தும் கண்டியூர், அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை என்று மண்டிக் கிடந்து உய்ந்தவர்கள்—உய்ய வழிகாட்டினவர்கள்.

ஆழ்வார்கள் பலவிடங்களிலும் (நிலைகளிலும்) பிரபத்தி (சரணாகதி) பண்ணினதும் அர்ச்சாவதாரத்திலே.

வடமொழியில் அமைந்துள்ள வேதக் கருத்துகள்ல் தெளியாத மறை நிலைகள் உள்ளன. அவைகளைத் தெளிய வைப்பது ஆழ்வார்கள் தம் அருளிச் செயல்களே. திருவாய் மொழியின் துணையைக் கொண்டு சூத்திர வாக்கியங்களை வேத வ்யாசரின் பிரம்ம சூத்திரங்களுக்கு இராமானுசர் முரண்பாடுகளை அகற்றி விளக்கம் தந்தார்.

முரண்பாடுகளை அகற்றி 'ஒருங்க விடுவர்' என்று பெரும் புகழும் உண்டே.

இத்தகைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஸ்ரீவைணவதிவ்விய தேசங்களில் திருவிழாக் காலங்கள், ஏனைய வழிபாடுகள் நிகழும் போதும் ஓதும்படி ஏற்பாடு செய்தவர் இராமாநுசரே.

ஆழ்வார்கள் பதின்மருடைய கீர்த்திகளையும் இணைத்து, இராமாநுசரின் புகழைப் பாடுகின்றார் திருவரங்கத்து அமுதனார்.

திருச் செவி சாற்றி உகந்தருளினார் ஸ்ரீ உடையவரும்.

ஒவ்வொரு ஆழ்வார்தம் பெருமைகளையும், அவர்களில் ஒவ்வொரு ஆழ்வார்களுடைய தனித் தன்மையையும் சிறப்பையும் வெளியிடுகிறார் அமுதனார்.

ஆழ்வார்களுடைய அவதார காரணங்களையும் பகுத்தறிவின் அடிப்படையில் நிலைக்க ரீதியாக விளக்குகின்றார் அமுதனார். பன்னிருவருடன் ஆழ்வார்களின் சங்கிலித் தொடர் அமைவதையும் முற்றுப் பெறுவதையும் ஆழமாகவும் அழகாகவும் அமுதனார் விளக்கியருள்கின்றார்.

## புறவிருள் அகலப் பொய்கைமுனி ஏற்றும் விளக்கு

முதலாழ்வார்கள் மூவர்—பொய்கையார் பூதத்தார், பேயார். இவர்கள் முதன்மையான வர்கள்; இவர்கள் ஸ்ரீவைணவச் சமயத்தின் முதன்மையான முப்பொருள் விளக்கம் அல்லது தத்துவத்திரயத்தை வெளியிட்டருளினார்கள் தங்கள் திருவந்தாதிகளிலே.



உலகில் பரவியுள்ள 'அசித்' சொரூபத்தைத் தம் அறிவுத் திருவிளக்கால் விளக்கினார் பொய்கை ஆழ்வார்.

'அசித்' தருவது புற இருள்.

ஆன்மாவிற்குப் புறத்தே உள்ள இருள் சூழ்ந்த உலகையே விளக்காக அமைத்துக் காட்டினார்.

அசித்தால் ஆன உலகம் சுடராழி ஏந்திய ஸ்ரீமந் நாராயணனுக்குள் அடக்கம் என விளக்கினார் முதல் திருவந்தாதியில் முதற்பாட்டில் பொய்கை ஆழ்வார்;

''வையம் தகளியா வார்கடலே நெய்யா
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன்
சொன்மாலை இடராழி நீங்குகவேஎன்று."

பொய்கையார் ஏற்றிய இத் திருவிளக்கைத் தம் திருவுள்ளத்தில் ஏற்றார் இராமாநுசரும்.

புற இருள்—புறத்தைப் பற்றிய இருள்
மறையின் குருத்து—வடமொழிக்கருத்துக்கள்.

## பொய்ந்நின்ற ஞானம் அகற்றும் பூதத்தார் விளக்கு

'சித்து' தத்துவத்தை விளக்க ஞானமென்னும் நிறைவிளக்கை ஏற்றியவர் பூதத்தாழ்வார். அரை குறை விளக்கும் அல்ல.

இறை ஞானம் ஏற்படாமல் இருந்த போது நம் இதயத்தில் அல்லது சித்தினிடம்



இருள் இருந்தது. பூதத்தாரின் இரண்டாவது திருவந்தாதியே சித்சொரூபத்தை விளக்கும் ஞானத் திருவிளக்கு.

''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகுசிந்தை இடுதிரியா நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்''

பூதத்தாரின் ஞானமென்னும் நறை விளக்கை நெஞ்சகத்தில் கொண்டார் உடையார்.

ஆத்ம சொரூபம் 'ஞானம்' ஆனந்தம் ஞானம் ஏற்பட்டால் ஆனந்தம் ஏற்படும். இவை அடியாக 'தாஸ்யம்' கைங்கரியம் ஏற்படும்.

**ஸ்ரீமத்வேத மார்க்கப் பிரதிஷ்டாபநாசாரியர்**
**ஆழி வண்ணனைக் காணும் பேயார்**

முப்பொருள் உண்மையான தத்துவத்திரயத்தில் மூன்றாவது அம்சமான ஈஸ்வர தத்துவத்தை விளக்குபவர் பேயாழ்வார்.

'மன்னிய இருள்' அசித்தைப் பற்றியது;
''மன்னிய பேர் இருள்' சித்துவைப் பற்றியது.

இவை இரண்டைப் பற்றிய அஞ்ஞானம் ஒழிந்தபோது ஈஸ்வரனைக் காண முடிகிறது.

ஓங்கி உலகளந்த உத்தமனை. திருவிக்கிரமனை. ஈஸ்வரனைக் காட்டியவரே தமிழ்த் தலைவர்:

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்
திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—
செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம்
கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று''

ஈஸ்வரனைப் பற்றிய ஞானத்தை அருளிய இத்தமிழ்த் தலைவர்களின் பொன்னடிகளைப் போற்றுகின்றார் இராமாநுசர் ஸ்ரீவைணவ சமயத்தின் முதன்மையான கருத்தை அருளியதால் இவர்களே முதலாழ்வார்கள்.

**பழமறையின் பொருள் அருளும் பாணர்**

முதலாழ்வார்களான மூவரால் தத்துவத்திரய ஞானம் ஏற்பட்டதும் வேத சாரமே கிட்டி விட்டது எனலாம்.

இந்த வேத சாரத்தைப் பிழிந்து அருளியவர் திருப்பாணாழ்வார். வேதாந்த தேசிகரின் திருவாக்கு.

'காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்றின்றி கண்ணனையே கண்டு உரைத்த கடிய காதல் பாண் பெருமாள் அருள்செய்த பாடல் பத்தும் பழமறையின்பொருள் என்று பரவுகின்றோம்'
(அதனால்)

'வேண பெரிய விரிதிரை நீர் வையத்துள்ளே
வேதாந்த ஆரியன் என்று இயம்பநின்றோம்
நாண் பெரியோம் அல்லோம் நாம் நறும்
தீதும்
நமக்கு உரைப்பார் (திருப்பாணர்) உளரென்று
நாடுவோமே'
அரங்கனைச் சேவித்த கண் மற்றொன்
றினைக் காணாவே''

எனக் கண்களை நாட்டியவர். இப் பாண் பெருமாளின் சரண மலர்களையே இராமா நுசர் தம் சென்னியில் சூடுவது.

**இடம் கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவர்**

'மற்றொன்றினைக் காணாவே' என்ற மனத் திடம் ஏற்பட்ட பிறகு அடுத்த பக்திசாரர் உருவிய வாளை உறையிலிடாதவராகிறார்.

மழிசைக்கு இறைவர் மார்தட்டுகின்றார்.

'காணிலும உருப்பொலார் செவிக்கினாத
கீர்த்தியார்
பேணிலும் வரம்தரமிடுக்கிலாத தேவரை
ஆணம் என்று அடைந்து வாழுமஆதர்காள்
எம் ஆதிபால்
பேணி நும் பிறப்பு எனும் பிணக்கு அறுக்க
நிற்கின்றீரே'

பேறு தப்பாது என்று மார்பிலே கைவைத்து ஊக்கம் ஊட்டுகின்றார்

'அத்தனாகி அன்னையாகி ஆளும்
எம்பிரானுமாய்
ஒத்து ஒவ்வாத பல் பிறப்பு ஒழித்து நம்மை
ஆட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்து
நம்முள்மேவினார்
எத்தினால் இடர்க் கடல் கிடத்தி ஏழை
நெஞ்சமே'

இந்த ஞானத்தை அருளிய திருமழிசை யாரின் கீர்த்தி உலகமெங்கும் பரவியது. இராமாநுசரும் இவரது இணை அடிகளில் அடங்கினார்.

**இன்பத் தொண்டர் அடிப்பொடியார்**

தொண்டர் அடிப் பொடியாரின் நிலை இன்னும் ஒருபடி அதிகம்.

மழிசையாரைப் போல் இவர் மறந்தும் புறந்தொழாதவர் மட்டுமல்ல. மறந்தும் மதிள்அரங்கனைத் தவிரப் புறம் தொழாதவர். இதனால் 'பத்தினி ஆழ்வார்' என்றே விருது பெற்றவர். திருவரங்கத்து ஐயன் கழற்கு மாலையும் அணிவார். மேலும் செந் தமிழ் மலர் மாலையும் அணிவார்.

இவரது தேர்ந்த நிலை
புலை அறம் ஆக நின்ற புத்தொடு சமணம்
எல்லாம்
கலை அறக்கற்ற மாந்தர் காண்பரோ?
கேட்பரோ தாம்
தலை அறுப்புண்டும் சாகேன் சத்தியம்
காண்மின் ஐயா
சிலையினால் இலங்கை செற்ற தேவனே
தேவன் ஆவான்'

அதனால் இராமநுசர் தொண்டர் அடிப்பொடி ஆழ்வாரின் திருவடிகளை விரும்புகின்றவர்.



**குலசேகரரின் குரை கழலே கூறுவோம்**

திரு அரங்கனின் கீர்த்தியைத் திருச்செவி ஏற்ற குலசேகரர் தினே தினே ரங்கயாத் திரையை மேற்கொண்டார். அரங்கனின் மெய்யடியார்களுடன் கூடி ஆடுவதே அவரது விழைவு.

ஆராத மனக் காதல் தொண்டர்தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக் களிப்போடு அழுத கண்ணீர்
மழைசோர நினைந்து உருகி ஏத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கத்தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்று கொலோ புரளும்நாளே.

கொல்லி காவலன், கூடல் நாயகன், கோழிக் கோன் குலசேகரரின் கவிகளைப் பாடும் பெரியவர்களுடைய பாதம் துதிப்பவர் எம்பெருமானார்.

இப்படியான இராமாநுசரை அடைப வர்க்கு வேறு தவமும் வேண்டாம்?

தம் (அரண்) மனையில் இருந்து கொண்டே அரங்கனிடம் ஈடுபடலாம்

**பதறிப் பல்லாண்டு பாடும் பெரியாழ்வார்**

இராமபிரான், கர தூடணர்களை வதைக்கச் சீதையின் காவலுக்காக இலக்கு மணனை விட்டு விட்டு, தன்னந்தனியாக



ஆயிரக்கணக்கான இராட்சதர்களை வதைக்கப் புறப்பட்டதை அறிந்ததும், குலசேகராழ்வார் தன்படைகளுடன் புறப்பட்டுவிட்டார், உதவி செய்ய.

இராவணன் சீதையைச் சிறை எடுத்துப் போனது அறிந்ததும், மறுபடியும் படைகளுடன் புறப்பட்டார் குலசேகரர்.

இந்தச் சமயம் இராமரே சீதா இலட்சுமணருடன் எதிர் வந்து சேவை சாதித்தார். குலசேகரரும் அமைதியும் ஆனந்தமும் அடைந்தார்.

இதே நிலையை அடைந்தவர் பெரியாழ்வாரும், தம்மைக் காப்பவராகவும் பெருமாளைக் காக்கப்படுபவராகவும் நினைத்துக் கொண்டு கூடல் (மதுரைப்) பதியின் வான வீதியிலே பறவை ஏறும் பரம புருடனாகக் காட்சி அளித்தபோது பெருமாளுக்குப் பல்லாண்டு பாடிய பெரியவர்.

ஏழு பிரகாரங்களால் பாதுகாக்கப்பட்ட திருவரங்கக் கருவறையில் சண்வளரும் கருமணியைக் காக்க வேண்டுமெனறு யாவருக்கும் எச்சரிப்பவர்.

உற'கல், உறசல், உறகல், ஒண் சுடர்
ஆழியே சங்கே,
அறவெறி நாந்தக வாளே, அழகிய சார்ங்கமே,
தண்டே,
இறவு படாமல் இருந்த எண்மர் உலோக
பாலீர்காள்,
பரவை யரையா உறகல் பள்ளியறைக் குறிக்
கொண்மின்''

இவரது திருவடிகளைத் திருவுள்ளத்தில் எப்போதும் உடையவர், உடையவர்.

**பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள்**

தம் தந்தையான பெரியாழ்வார் மணமுடைய மாலையைச் சாற்றிய பெருமாளுடைய திருத்தோள்களுக்கு, மணமாலையும் சாற்றியவள் ஸ்ரீ ஆண்டாள்.

வேதத்தின் உயர்வு குறைந்து உலக முழுவதும் கலிபுருடனின் காலம் ஓங்கி இருந்த சமயம். 'வேதம் அனைத்துக்கும் வித்தான திருப்பாவையால் உலகை மீண்டும் பக்தி மார்க்கத்தில், திருத்திக் கொணர்ந்தவள் ஸ்ரீ ஆண்டாள்.

**ஆண்டாளுடைய அருள் நிரம்பியவர் இராமாநுசர்**

திருவரங்கம் திருவீதிகளில் பிச்சைக்கு எழுந்தருளிய போதும் திருப்பாவை அநுசந்தானம்தான். இதனால் 'திருப்பாவை ஜீயர்' என்றே போற்றப்படுவர்.

பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவள் தானே ஆண்டாள்.

இதனால்தான், திருவரங்கம் நடைபெறும் திருவாய்மொழித் திருவிழாவிலே எம்பெருமானார் தமது தங்கையான ஆண்டாளின் சார்பிலே திருப்பாவை நாச்சியார்திருமொழிசேவா கால மரியாதைகளைப்பெற்றுக் கொள்ளுகிறார்.

**பொங்கு புகழ் மங்கையர்கோன்:**

திருப்பாவையானாலும் நாச்சியார் திருமொழியானாலும் ஸ்ரீ ஆண்டாள் உடனிருந்த பக்த கோபியர்களை அழைத்துக் கொண்டு நோன்பு நோற்றாள். எம்பெருமானை அநுபவித்தாள்.

திருமங்கை மன்னனும் தமது சகாக்களான நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான் உயரத் தொங்குவான், தோலா வழக்கன் கோஷ்டியாகவே திவ்ய தேசங்கள் தோறும் சென்று வணங்கினார்! அநுபவித்தார்.

பொருள் இருந்த போதும் பொருள் அற்ற போதும் ஸ்ரீவைணவத் ததியாராதனையைக் கைவிடவில்லை.

இறைவனை எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணார்.

கள்ளார் பொழில் தென்னரங்கன் கமலப் பதங்கள் நெஞ்சில் கொள்ளும் குறையல் பிரானடிக் கீழ் விள்ளாத அன்பர் இராமாநுசர்.

**மதுரகவியின் மாண்பு:**

பரகால நாயகியும், பராங்குச நாயகியும் ஒரே மனம் உடையவர்கள்.

நம்மாழ்வார் நல்கிய நான்மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் ஆலி நாடராம் மங்கை மன்னன். இருவரும் ஆயிரம் பாசுரங்களுக்கு மேல் அருளியவர்கள். வேதத்தின் சாரமே இவைகள்.

வேதத் தமிழ் செய்த மாறனையும் அவரது சீடராம் மதுரகவிகளையும் தம் சிந்தையுள்ளே கொண்டவர் எம்பெருமானார்.

**நம்மாழ்வாரே நாதன் :**

நம்மாழ்வாரைப் பற்றி நினைக்க ஆரம்பித்ததுவே இராமாநுசருக்கு நம்மாழ்வாரிடமும், திருவாய்மொழியினிடமும் இருந்த அபார ஈடுபாட்டை வெளியிட்டருள்கின்றார் அமுதனார்.

ஆம்! இராமாநுசருக்குத் திருவாய்மொழி தான் மகாநிதி. தாய் தந்தை, குரு, ஏன்? எம்பெருமான்கூடத்தான்.

திருவாய்மொழி ஏற்படவில்லையானால் உலகம் வெறும் பாழ்தான். பகவத் விஷயம் அதாவது பகவானுடைய திருக்கல்யாண குணங்களை விளக்கும் திருவாய்மொழிதான் எல்லாமும் நமக்கு.

ஆழ்வார்களுடைய தென்மொழி திவ்விய பிரபந்தங்களை உடையவர். திவ்விய தேசங்களில் வேதமாகவே ஓதும் முறையை ஏற்படுத்தவில்லையானால் உலகம் இவைகளை இழந்திருக்கும். நம்மாழ்வார் இராமாநுசரைப் பவிஷ்யத் (வருங்கால-எதிர்கால) ஆசாரியராக காட்டியருளிய பாசுரம்.

'பொலிக பொலிக பொலிக போயிற்று வல்
உயிர்ச்சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு
யாதொன்றும் இல்லை
கலியும் கெடும் கண்டு கொண்மின் கடல்
வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலிய புகுந்து இசைபாடி ஆடி உழிதரக்
கண்டோம்''

நம்மாழ்வாரின் திருவாய் மொழி எப்படி எப்படி எல்லாம் விளங்குகின்றது நமது இராமாநுசருக்கு.

''உறுபெறும் செல்வமும் தந்தையும் தாயும்
உயர் குருவும்
வெறுதரு பூமகள் நாதனும் மாறன் விளங்கிய
சீர்
நெறிதரும் செந்தமிழ் ஆரணமே என்று
இந்நீர் நிலத்தோர்
அறிதர நின்ற இராமாநுசன் எனக்கு
ஆர் அமுதே.''

## ஆழ்வார் அளிக்கும் அமுது அர்த்த பஞ்சகமே.

ஆழ்வார் என்றாலே நம்மாழ்வார்தான். இவரே உடல். ஏனைய ஆழ்வார்கள் உடலின் உறுப்புகள்; அதாவது திருவாய்மொழியில் உள்ள திரண்ட கருத்துக்களை



ஒவ்வொரு ஆழ்வாரும் பங்கிட்டுப் பாடியிருக்கின்றார்கள்.

நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியின் ஏற்றம் என்ன! அர்த்த பஞ்சக ஞானம் அளிப்பதே.

பட்டர் அருள்வது:

''மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர்
நிலையும்
தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்
குருகையர்கோன்
யாழினிசை வேதத்து இயல்''

திருவரங்கத்து அமுதனார், தமது நூற்றந்தாதி மூலமாக, இராமாநுசரது புகழாகிய அமுதத்தையும், ஸ்ரீவைணவ தரிசனத்தின் அடிப்படைக் கொள்கையான அர்த்த பஞ்சக அமுதத்தையும் குழைத்து அருளுகின்றார். அளவுக்கு மீறினாலும், இந்த அமுதம், அமுதமே.

**மிக்க இறைநிலை**

நமக்கு மோட்சம் கிடைக்குமென்றால் மகிழ்ச்சி அடைகின்றோம். 'நரகம் தான் முடிவு' என்று ஏற்பட்டு விட்டால் வருந்துகிறோம்.

இந்த நிலை ஏற்படுவது எப்படி? நம் முயற்சியால்தான் நாம் வாழ்கின்றோம். பலன்களை அடைகின்றோம் என்று எண்ணினால், 'ஆசாரிய கடாட்சத்தினால் நாம் வாழ்கின்றோம்' என்ற நம்பிக்கையும் டணிவும் ஏற்பட்டு விட்டால், மோட்சமும் நரகமும்கூட நம் உணர்ச்சிகளைப் பாதிக்காது.



ஆசாரியரான இராமாநுசர் இதை எப்படிச் செய்கின்றார்!

அசித்தால் ஆன, அனாதிகாலமாக உள்ள இந்த உலகத்தில், பொருந்தி வாழ்கின்ற எல்லா ஆன்மாக்களுக்கும் ரட்சகனானவன், ஆச்சரியமான குணங்களை உடைய திருமால் தான் என்று மிக்க இறை நிலையை போதித் தருள்கின்றார்.

'சுய அபிமானத்தாலே ஈசுவர அபிமானத்தைக் குலைத்துக் கொண்ட இவனுக்கு (ஆன்மாவுக்கு) ஆசாரிய அபிமானம் ஒழியக் கதி இல்லை' என்று (வடக்கு) திருவீதிப் பிள்ளை பலகாலும் அருளிச் செய்யக்கேட்டி ருக்கையால் இருக்கும் (ஸ்ரீ வசன பூஷணம்-446)

''இன்பம் தரும் பெரு வீடு வந்து எய்தில்
என் எண்ணிறந்த
துன்பம் தரும் நிரயம் பல சூழில் என்? தொல்
உலகில்
மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் என
மொழிந்த
அன்பன் அனகன் இராமாநுசன் என்னை
ஆண்டனனே''

மிக்க இறைநிலை—ரட்சகத் தன்மையே! ஏன் இந்த ஆன்மாக்களை இறைவன் ரட்சிக்க வேணும்?

இது அவனுடைய கடமையா? உயிர் வேறு, உடல் வேறானாலும் உடலில் பொருந்தி யுள்ளது உயிர். உயிரை ஒட்டி உள்ளது உடல்.

உயிர்உடலை ரட்சிப்பது போல,

உடலுக்கு உற்ற துன்பத்தை உயிர் விலக்குவது போல.

ஆன்மாக்கள் இறைவனுக்கு உடலைப் போல அமைந்துள்ளன. எனவே இந்த உடலை ரட்சிப்பது உயிராகிய இறைவனே! சித் அசித்தாலான உலகத்தை உடலாகக் கொண்டவன் ஈஸ்வரனாகிய ஸ்ரீமந் நாராயணன்.

இந்த சரீர;சரீரி சம்பந்தத்தைத் தெளிவாகவும் சிறப்பித்தும் காட்டியருளியவர் ராமாநுசரே.

'பரமாத்மா ஒருவனே உண்மை' எனும் அத்துவைதத்தையும்

''பரமாத்மாவும், ஜீவாத்மாவும் இரண்டும்தான் உண்மை' எனும் துவைதத்தையும் இணைத்து,

அசித், சித், ஈஸ்வரன் இவை மூன்றும் உண்மையே!

ஈஸ்வரன், அசித்தையும் சித்தையும் உடலாகக் கொண்டு அவைகளைக் காக்கும் உயிராக உள்ளான்' என்று விசிஷ்டாத்துவைத (ஸ்ரீ வைணவ சமய) மேன்மையை வடமொழி தமிழ்மொழி மறைகளால் வெளியிட்டவர் இராமாநுசரே.

இது ஒரு அற்புதம் தானே! ஞானக் கலக்கத்தை விலக்கிச் செம்மைப் படுத்துவது தானே அற்புதம். இந்த ஞானத்தால் நம்மை ஆட்கொண்டார் இராமாநுசர்.

**மெய்யாம் உயிர் நிலை**

இறைவனின் குணம் ரட்சகத்துவம்—
காப்பாற்றல்

ஆன்மாவின் குணம் சேஷத்துவம்—இறைவனுக்கு அடிமைப்பட்டு இருத்தல்.

'அகம்' (ஆன்மா) அர்த்தத்திற்கு ஞான ஆனந்தங்கள் தடஸ்தம் (புறத் தோற்றங்கள்) என்னும்படி; தாஸ்யமிறே (அடிமைப்பட்டிருத்தல்) (உண்மை-உள்-நிலை) அந்தரங்க நிருபகம். (ஸ்ரீ வசன பூஷணம்-74)

அதாவது அரங்கனாகிய இறைவனது மலரடிக்கு, ஆள் உற்றவராக இருந்துவாழ்தல்.

இப்படி வாழ்பவர்களே, மதிக்கத்தக்கவர்கள். நாம் விரும்பி அடையத்தக்கவர்கள்.

இப்படியாக வாழ்ந்தருளிய பெரியோர்களை ஆத்ம உறவினர்களாகத் துணைகொண்டு வாழ்ந்து காட்டியவர் இராமாநுசர்.

இறைவனுக்கு அடிமைப்பட்டிருத்தலாகிய சேஷத்துவ ஞானத்தைப் பெற்ற பிறகு வேறு ஒரு அஞ்ஞானம் நம் மதிப்பிற்கு இலக்காகுமா!

'மற்றொரு பேறு மதியாது, அரங்கன் மலர் அடிக்கு ஆள்
உற்றவரே தமக்கு உற்றவராக் கொள்ளும் உத்தமனை
நற்றவர் போற்றும் இராமானுசனை இந் நானிலத்தே
பெற்றனன்; பெற்றபின் மற்று அறியேன் ஒரு பேதமையே'

மிக்க இறைநிலை தனிப்பட்டது மெய் யாம் உயிர் நிலையும் தனிப்பட்டது. காப்பாற்றுகிற இறைவன் வேறு, காப்பாற்றப் படுகிற ஆன்மா வேறு; ஆட்சி செய்கின்ற இறைவன் வேறு; அடிமை செய்கின்ற ஆன்மா வேறு.

எனவே, இவை இரண்டும் தனித்த தன்மை உடையவை; ஒன்றில் ஒன்று கலந்து விடாது.

இதற்கு மாறாக, 'ஆன்மா இறைவனிடம் இரண்டறக் கலந்து விடுகிறது'' என்று வேதப் பொருளைத் தவறாகச் சொல்லுவது எல்லாம் பேதமை தான்.

இந்த வினைகளை எல்லாம் தமது தர்க்க ஞானத்தாலே வென்றவர் இராமானுசர்.

சித் அசித் ஈஸ்வரன் என்ற மூலப் பொருள்கள் மூன்று; இவை மூன்றுமே சத்திய மும், நித்தியமும்.

சித் அசித் என்பவை ஈஸ்வரனுக்குச் சரீரங்கள்.

எம்பெருமானுடைய திருவருளாலே கரும வினைகள் ஒழிந்து, பரமபதத்தில் இறை வனுக்குக் குற்றேவல் புரிவதும் பல்லாண்டு பாடுவதுமே மோட்சம்.

இவைகளை நிலைநாட்டி வெற்றி பெற்றார் உடையவர்.

**தக்க நெறி**

'சர்வ தர்மாந் பரித்யஜ்ய!
மாம் ஏகம் சரணம் வ்ரஜ!

என்ற சரம சுலோகத்தாலே, நாம் கடைப் பிடிக்கத் தக்க நெறியை, கீதையில் போதித்த வன், பஞ்சபாண்டவர்களின் பிரதிநிதியான, அர்ச்சுனனுடைய தேர்த்தட்டிலே எழுந் தருளிய கண்ணன்.

தன்னையே சரணாகப் பற்ற வேண்டு மென்று, அர்ச்சுனன் மூலமாக உலகிற்குக் காட்டித் தந்தான்.

''கையும் உழவுகோலும்
பிடித்த சிறுவாய்க் கயிறும்
சேனாதூளி தூசரிதமான திருக் குழலும்
தேருக்குக் கீழே நாற்றின் திருவடிகளுமாய்
நிற்கின்ற சாரத்திய வேஷத்தை,
,மாம்' என்று காட்டுகிறான்?'



கீதையிலே இறைவன் உபதேசித்தருளிய, நாம் அடையத்தக்க நெறியை, எளிதில் நாம் தெரிந்து கொள்ளும் வகையில், எம் பெருமானார் 'கீதா பாஷ்யம்' அருளிச் செய் தார்.

எம்பெருமானாருடைய இந்தப் பரம கருணைக்குத் தோற்று, 'அவரைப் பணியும் நல்லோர்களையும் பணிகின்றன எனது ஆவி யும் (ஆன்மாவும்) சிந்தையுமே (மனமும்), என்று உள்ளம் கரைகின்றார் அமுதனார்.

**தடையாகித் தொக்கியலும்**

தக்கநெறியை நாம் அடைவதற்கு உலக ஆசைகளே நமக்குத் தடை. இத்தடைகள் ஒன்றை ஒன்று பின்னிக் கிடக்கின்றன.

ஒன்று மற்றதற்கு வழிகாட்டி. பாதை சருக்கு மரம்.

இத்தடைகள் விதிவசத்தாலே நம்மை வந்து அடைகின்றன. இத் தடைகளிலே வீழ்ந்து தவிக்கின்ற நம் ஆவியைக் (ஆன்மா வைக்) கைகொடுத்துத் தூக்கிக் காப்பாற்றி அருள்பவர் இராமானுசர். எப்படிக் காப் பாற்றுகின்றார்.

லட்சுமி காந்தனாகிய திருமால் தான் நமக்கும் எல்லோருக்கும் நாயகன். அவன நம்முடைய எல்லா பாவங்களையும் அகற்றித்



தூய்மை அளிப்பவன் என்று உபதேசிக்கின்றார் 'போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகுமே'.

'' வாழ்வினை '' வைணவர் தம்பேறு — வாழ்வில் வைணவம்.

பூரண வாழ்வு. புகழுடைய வாழ்வு நான்கு சேர்ந்ததாகும். இவையே 1. அறம், 2. பொருள் 3. இன்பம் 4. வீடு இவையே புருஷார்த்தங்களாம். அதாவது புருஷர்கள்(பெண்களையும் உள்ளிட்ட சொல்) அடையத் தக்கன.

'இன்பம்' என்ற சொல்லுக்குச் 'சிற்றின்பம்' என்று தவறாகப் பொருள் கொள்ளக் கூடாது. 'மூவடி மண்தா' என வாமனன மாவலியைக் கேட்டபோது, அவன் குறுகிய பொருள் கொண்டது போல்.

'இன்பம்' என்றால் அது 'பேரின்பமே' 'அது கண்ணனிடம் செலுத்தும் பேர் இன்பமேயாகும்' என்பது இராமாநுசரின் திரு உள்ளம்.

நமது இன்பத்தைக் (காமத்தைக்) கண்ணனிடம் செலுத்தினால் அதுபேரின்பமாகப் பரிணமிக்கின்றது.

இப்படிக் கண்ணனை அடையப் பெறும், பேரின்பத்திற்கு உதவுபவை தான் அறம் பொருள், வீடு என்று விளக்கம் அருள்கின்றார் இராமாநுசர்.

கண்ணன் மீதுள்ள காமத்தினால் அல்லது அவன் மீது காமம் ஏற்படுவதற்கு (1) அறம் செய்ய வேணும் (2) பொருள் ஈட்ட வேண்டும்; (3) வீட்டை (பரமபதத்தை) அடைய விரும்ப வேண்டும்.

இவ்விதமாக இன்பம் என்ற சொல்லுக்கு உயர்ந்த பொருளைக் காட்டும்போது, 'ஓங்கி உலகளந்த உத்தமனாகத்' - 'திரிவிக்கிரமனாகச் சேவை தருகிறார் எம்பெருமானார்.

வைணவர் தம் வாழ்வு என்னவென்றால் இறைவனை அடைந்து பெறும் பேரின்பத்திற்காகவே, அறம், பொருள் வீட்டைப் பயன் படுத்த வேண்டும்.

எம்பெருமானார் தரும் ஏற்றம் - எம் வாழ்வில் வைணவம்.

எம்பெருமானாருடைய வைபவத்தால் ஏற்பட்ட நன்மைகள் யாவை?

தென் குருகூரில் திருவவதரித்து ஞானத்தை வாரி வழங்கிய வள்ளலான நம்மாழ்வாருடைய அர்த்த பஞ்சக அறிவை வெளியிடும் திருவாய் மொழியாம் தமிழ் மறை வாழ்வு பெற்றது.

அதனால், பிறரால் வெகு சிரமப்பட்டு நாட்ட முயன்ற மதங்கள் செத்து ஒழிந்தன.

அதனால் ஸ்ரீமந் நாராயணனே பரம் பொருள்' என்று காட்ட ஏற்பட்ட வேதம் உற்ற துணை கிடைத்துக் களிப்புற்றது.

''எம்பெருமானார் தரிசனம்' நமக்கும் தரிசனம் தந்தது, தருகின்றது. இது, நம் வாழ்வில் வைணவம் — ஆம், வாழ்வே வைணவம்.



38. அகத்தியர் காலடிச்சுவடு : பொதிகை மலையில் அகத்தியருக்கு ஒரு கோயில் இருக்கிறது. அம்பா .சமுத்திரம் அகத்தியர் கோயிலில் ஊர் மக்கள் சோறு பொங்கி வந்து ஓர் அறையில் பரப்பி மூடி விடுவார்களாம். மறுநாள் காலை, அறையைத் திறந்து பார்த்தால், சோற்றில் காலடித்தடங்கள் படிந்திருக்கும் என்றும் அவை அகத்தியருக்கு உரியன என்றும் பக்தர்கள் நம்புகின்றனர்.

39. கனக்கும் கருடாழ்வார் : நாச்சியார் கோயில் கருடசேவை விழாவின்போது கருடாழ்வாரைச் சுமக்க முதலில் நான்கு பேரும் அடுத்து எட்டுப்பேரும் தொடர்ந்து முப்பத்திரண்டு பேரும் தேவைப்படுகிறார்கள். இப்படிப் படிப்படியாகச் சுமப்பவர்களின் எண்ணிக்கை அதிகமானால்தான். அவரை உலாவரச் செய்ய முடியுமாம்.

40. பிரமன்: சரஸ்வதி; நாரதர்: 1. திருக்கண்டியூர் உத்தமர் கோயிலிலும் திருக்குடந்தை வேத நாராயணப்பெருமாள் கோயிலிலும் திருக்காளத்திக் கோயிலின் அருகிலும் பிரமனுக்குத் தனிச் சந்நிதிகள் இருக்கின்றன. 2. பிரமனின் மனைவி சரஸ்வதிக்கும் கூத்தனூரில் (நாகை மாவட்டம்) தனிக் கோயில் ஒன்று இருக்கிறது. இங்குள்ள தேவியை ஒட்டக்கூத்தர் 'ஆற்றங்கரைச் சொற்கிழத்தி' என்று போற்றுகிறார். சரஸ்வதி பூசை நாளன்று தேவியின் திருவடிகள் நீண்டிருக்குமாறு அலங்கரிக்கப்படுகிறது. அன்று பக்தர்கள் அனைவரும் திருவடிகளுக்குத்தாமே பூசை செய்யலாம். இவ்வழக்கம் இன்றும் உண்டு. 3 பிரமனின் மகன் நாரதருக்கு விராலிமலையில் தனிச்சந்நிதி இருப்பது அபூர்வமாகக் கருதப்படுகிறது.



41. நவக்கிரகங்கள் : பொதுவாக, நவக்கிரகச்சந்நிதி கோயிலின் வடகிழக்கு மூலையில் அமைந்திருக்கும். நவக்கிரகங்கள் ஒன்றையொன்று முரண்பட்டு வக்கிரநிலையில் நிற்பன 1. சுசீந்திரம் கோயிலின் நவக்கிரகங்கள் விதானத்தில் 12 ராசிகளுடன் அமைக்கப்பட்டுள்ளன. வானில் இயங்கும் இவை விதானத்தில் பொறிக்கப்பட்டிருப்பது பொருத்தமே. 2. வக்கிர முரண்பாடு நீங்கி திருவாரூர், வேதாரண்யம், வைத்தீஸ்வரன் கோயில் முதலான இடங்களில் நவக்கிரகங்கள் ஒரே நேர் வரிசையில் காணப்படுகின்றன. 3. கொட்டையூரில் தமது வாகனங்களுடன் அவை வீற்றிருக்கின்றன. 4. ஸ்ரீவைகுண்டத்திற்கு அருகில் உள்ள கருங்குளம் சிவன் கோயிலில். மற்ற தெய்வங்கள் தத்தம் சக்தியுடன் வீற்றிருப்பதைப் போல் நவக்கிரக நாயகர்களும் தம் சக்திகளுடன்-மனைவிகளுடன் வீற்றிருக்கிறார்கள். 5. நாகைப்பட்டினத்தில் மேற்கு நோக்கி வரிசையாக நிற்கிறார்கள். 6. திருக்கருகாவூரில் சூரியனைச் சுற்றி, மற்ற எட்டு நாயகர்களும், சூரியனையே பார்த்தவாறு காட்சி தருகிறார்கள் 7 திருக்காளத்தியில் நவக்கிரகங்களுக்குத் தனிச்சந்நிதி இல்லை. லிங்கத்திற்கு மேலுள்ள வெள்ளிக் கவசத்தில் நவக்கிரகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இறைவர் இங்கு நவக்கிரகங்களைத் தம்மோடு வைத்துக்கொண்டு தோஷ நிவர்த்தி செய்து அருள்பாலிக்கிறார். 8. மிகப்பழங்காலத்தில் கடவுள்களை யந்திரங்களாக குறியீடுகளாக வணங்கினார்கள். வழிபாட்டுக்குரிய இத்தகைய நவக்கிரக யந்திரம் வைத்தீசுவரன் கோயிலில் காணப்படுகிறது. 9 நவக்கிரக தோஷ நீக்கத்திற்கான அற்புதத்தலங்கள் (அ)சூரியன்-சூரியநாயனார்(ஆ)சந்திரன் - திங்களூர் (இ) செவ்வாய்- வைத்தீசுவரன்கோயில் (ஈ) புதன்-திருவெண்காடு (உ) குரு-ஆலஙகுடி (ஊ) சுக்கிரன்-கஞ்சனூர்-(எ)சனி-திருநள்ளாறு-(ஏ) ராகு-திருநாகேஸ்வரம் (ஐ) கேது-கீழப்பெரும்பள்ளம். நவக்கிரகங்களை ஏழு முறைகள் பிரதட்சணமாகவும் மேலும் இரண்டுமுறை அப்பிரதட்சணமாகவும் வலம் வர வேண்டும். ஒரு நாளில் ஓர் இடத்தில் ஒரு முறை வழிபடலாம்.

42. சுவர்ண ரேகை : கொல்லூர் முகாம்பிகைக் கோயிலில் லிங்கத்தில் ஒரு சுவர்ண ரேகை இழையோடுகிறது. வலப்பாகம் சிவனுக்கும் இடப்பாகம் சக்திக்கும் உரியன. 'சக்தி' பாகம் 'சிவன்' பாகத்தை விடச் சற்றுப் பெரியதாகவும் ஒளி மிக்கும் விளங்குகிறது. சுவர்ணரேகை படர்ந்த இதுபோன்ற லிங்கத்தை வேறு எங்கும் காணமுடியாது.

43. அந்த மூன்று நாள்கள்: மற்ற மகளிருக்குரிய அந்த மூனறு நாள்கள் கேரளாவைச் சார்ந்த செங்சன்னூர் பகவதி அம்மனுக்கும் உண்டு. இது வேறு எங்கும் காண முடியாத. கேட்கவும் முடியாத அதிசயத்திலும், அதிசயமான உண்மை நிகழ்ச்சி.

44. இல்லை: 1. திங்களூரில் பாம்பினால் தீண்டப்பட்டு இறந்தவர் எவரும் இல்லை 2 ரத்னகிரியின் சில பகுதிகளில் காகங்கள் பறப்பதே இல்லை. 3. மாமரமாய்

நின்ற சூரனை முருகன் கொன்ற இடம். திருச்செந்தூருக்கு அருகிலுள்ள மாப்பாடு (மணப்பாடு) இங்கு இப்போதும் மாங்கன்றுகள் தழைப்பது இல்லை. 4. வயலூரிலும் அதைச் சூழ்ந்த இடங்களிலும் தீங்கு இழைக்கும் விஷப் பூச்சிகள் இல்லை. 5. பூந்தோட்டத்திற்கு அருகில் இருக்கும் அம்பர் மாகாளம் காளியம்மனைப் பூசையின்போதும் தீண்டுவதில்லை தூரநின்று கோல் ஒன்றின் துணையுடன் ஆடை முதலியன அணிவித்துவழிபாடு செய்கிறார்கள். 6. திருவிற்கோலம் (கூவம்) துரிபுராந்தகரையும், இலம்பையங்கோட்டூர் சந்திரசேகரரையும் தீண்டுவதில்லை.

45. அகோர வீரபத்திரர்: சிவனின் அறுபத்து நான்கு மூர்த்தி வகைகளில் அகோர வீரபத்திரர் ஒருவர். மிக உக்கிரமான வடிவம் இவர் எழுந்தருளியுள்ள ஒரே தலம் திருவெண்காடு.

46. பதினெட்டாம்படியும், அறுபதாம் படியும்: 1. சபரிமலை ஸ்ரீ ஐயப்பன்கோயிலின் பதினெட்டுப்படிகளை எல்லாரும் அறிவார்கள். பழமுதிர் சோலைக் கோயிலின் ராஜகோபுரத்திற்கும் பதினெட்டுப்படிகள் உள்ளன. இதன் பிரதான வாசல்எப்போதும் அடைக்கப்பட்டிருக்கும். கதவுகளில் கருப்பண்ணச்சாமி என்ற காவல் தெய்வம் வீற்றிருப்பதாகக் கருதி அவரைப் பதினெட்டாம் படிக்கருப்பண்ணசாமி' என்று வழங்குகிறார் கிறார்கள். இங்குப் படிகளைக் கடவுள்களாகவும், வாசலை கருப்பக்கிரகமாகவும் நினைத்து கதவுகளுக்கே நாடோறும் பூசைகளைச் செய்கிறார்கள். இவரை வணங்கிய பின்னரே. வேறு வாசல் வழியாகப் பக்தர்கள் கோயிலுக்குள் நுழைகிறார்கள். 2. திருச்செங்கோட்டுக்குரிய 'ஆயிரத்துக்கு மேற்பட்ட படிகளில் அறுதாம்படி 'சத்தியப்படி' ஆகும். ஏதேனும் ஒரு வழக்கில் ஒருவர் இந்தப் படியின் மீது நின்று 'முருகன் பேரால் சத்தியம் செய்வதை மக்கள் இப்போதும் ஏற்கிறார்கள். இதே போல, திரு ஆமாத்தூர்க் கோயிலின் பிரகாரத்தில் இருக்கும் 'வட்டப்பாறை'யும் சத்தியப்பாறையாக விளங்குகிறது. வட்டப் பாறை அம்மன் சந்நிதிக்கு வந்து வட்டப் பாறையின் முன் சத்தியம் செய்யச் சொல்லி வழக்கில் தீர்வு காண்பது இப்போதும் உள்ள வழக்கம்.

47. இந்திரன் செய்யும் பூசை: சுசீந்திரம் தாணுமாலன் கோயிலில் மூலவருக்கு இந்திரன் இரவு நேரப்பூசை செய்வதாக நம்புகின்றனர். 'அர்த்தயாமப் பூசைக்கு வேண்டியவற்றை ஒரு குருக்கள் தொகுத்து வைத்து நின்றுவிடுவார். மறுநாள் காலையில் நடை திறக்கும். மற்றொரு குருக்கள் 'அகம் கண்டதைப் புறங்கூறேன்' என்று சத்தியம் செய்து நடைதிறப்பார். இரவில் இந்திரன் பூசை செய்திருப்பான். மிகப் பழங்காலந்தொட்டே இம்முறை பின்பற்றப்படுகிறது.



48. தாமே விரும்பிய சிலைகள்: அடியார்கள் தாமே விரும்பிப் போற்றிய இரண்டு சிலைகளைப்பற்றிக் காணலாம். 1. நம்மாழ்வார் தமது செப்புச் சிலையை உருவாக்கத் தாமிரபரணி நீரைக் காய்ச்சுமாறு தம் சீடர் மதுரகவி யாழ்வாருக்குக் கட்டளையிட்டார். முதலில் ஸ்ரீராமானுசரின் திருவுருவம் தோன்றியது. அடுத்து நம்மாழ்வாரின் திருவுருவத்திருமேனி உருவானது. அந்தத் திருமேனியில் தம் உருவிலிருந்த ஜீவஒளியைப் பாயச்செய்து பூத உடலை மடியச் செய்தார் இந்த அதிசயச் செப்புத் திருமேனி ஆழ்வார் திருநகரி புளியமரத்தடியில், சந்நிதியில் இன்றும் விளங்கி அனைவருக்கும் சேவை சாதிக்கிறது. 2. சீடர்களின் வேண்டுகோள்படி ஸ்ரீராமானுசர் ஒரு செப்புச் சிலையை வடிக்கச் சிற்பிக்கு ஆணையிட்டார். திருமேனி உருவானது. அது தம்மை முழுவதும் ஒத்திருப்பதைக் கண்டு மிக மகிழ்ந்தார். அதை அணைத்துத்தம் பதினாறு கலைகளையும் அத் திருமேனியில் பொலியச் செய்தார்; ஸ்ரீபெரும்புதூரிலேயே நிர்மாணித்தார். இதுவே 'தான் உகந்த திருமேனி' ஆகும். 108 திவ்யப் பதிகளுக்கு யாத்திரை செய்யும் அடியார்கள் ஸ்ரீராமானுசரின் இத்திருமேனியைத் தரிசிக்காவிட்டால் யாத்திரை பூரணமாக நிறைவேறியதாகக் கொள்ளப்படுவதில்லை.

49. மும்மூர்த்திகள்: 1. சுசீந்திரம் கோயிலில் மும்மூர்த்திகள் 'தாணுமாலயன்' தாணு-சிவன்; மால்-விஷ்ணு; அயன்-பிரமன் என்ற ஒரே மூர்த்தத்தில் வழிபடப்படுகின்றனர். 2. திருக்கரம்பனூர் உத்தமர் கோயிலில் மும்மூர்த்திகளுக்குச் சந்நிதிகள் உள்ளன. ஆகவே இதைத் திரிமூர்த்தி சேத்திரம் என்பர். 3. ஒரே கல்லில் மும்மூர்த்திகளும் செதுக்கப்பட்ட அபூர்வமான ஒரு சிற்பம் இருக்கிறது. இது புடைப்புச் சிற்பம்; நின்ற கோலம்; நடுவில் சிவன்; அவருக்கு வலப்பக்கம் விஷ்ணு; இடப்பக்கம் பிரமன். இதனை மலைசாமி என்ற பெயரில் வழிபடுகின்றனர். பொள்



ளாச்சியருகில் கூளப்பநாயக்கன் பட்டியை ஒட்டிய சோமங்கலம் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே மலையாண்டிக் கோயிலில் மும்மூர்த்திகளின் இந்த அபூர்வமான சிற்பத்தைத் தரிசிக்கலாம்.

50. அருள் பிரசாதங்கள்: வைத்தீசுவரன் கோயில் வைத்தியநாதரும் திருவான்மியூர் மருந்தீசுவரரும் உயிர்களின் பிறவி நோயையும் உடலுக்கு வரலாகும் 4448 வகையான நோய்களையும் ஒருங்கே ஒழிக்கும் அதிசய மருத்துவர்கள் ஆவார்கள். மேலும் தன்வந்திரி என்பவர் ஒரு தேவ வைத்தியர்; விஷ்ணுவின் அம்சம். இவரது திருமேனியை வைத்தீசுவரன் கோயில் திருவரங்கக்கோயில் முதலான மிகச் சில இடங்களில் தரிசிக்கலாம். இவரது அருட்பார்வை தம்மீது பதிந்தாலே நோய்கள் அறவே வாரா என்றும்; வந்த நோய்கள் தாமே போகும் என்றும் பக்தாகள் நம்புகின்றனர்.

பல கோயில்களில் தரப்படும் அருள் பிரசாதங்கள் தெய்வத்தன்மையுடன் இயல்பாகவே நோய்களைத் தீர்க்கும் மருத்துவக் குணமுடையவை. விபூதி சந்தனம், குங்குமம் துளசி, வில்வம், வேம்பு, துளசி தீர்த்தம், மஞ்சள் தீர்த்தம், சங்கு தீர்த்தம், சுனை தீர்த்தங்கள். அருவித் தீர்த்தங்கள் முதலிய அனைத்துப் பிரசாதங்களும் வெவ்வேறான மருத்துவக்குணமுடையவை. 1. பழனி முருகன் சிலை மிக அபூர்வமான நவபாஷாணத்தால் ஆனது. இச்சிலைக்குச் செய்யப்படும் அபிடேகப் பொருள்களான திருநீறு, பன்னீர் பால்; தயிர், சந்தனம், பஞ்சாமிர்தம் முதலிய அனைத்தும் நவபாஷாணத்தின் மருத்துவக் குணங்களை ஈர்த்துக் கொள்கின்றன. அவை தீராத நோய்களைத் தீர்க்கின்றன. 2. நாகர் கோயில், கும்பகோணம், நாகேசுவரம், புற்றிடம் கொண்ட ஈசன் கோயில்களில் புற்றுமண் அருள் பிரசாதமாம். 3. திருச்செந்தூரின் பன்னீரிலை, விபூதி மிக விசேடமானது. 4. திருவிண்ணகர் ஒப்பிலியப்பன் கோயிலின் உப்பிலாப் பிரசாதமும் ஒரு தனித்தன்மையுடைய தாகத் திகழ்கிறது. 5. திருக்கருகாவூரில், கர்ப்பரட்சாம்பிகை, சந்நிதியில் மந்திரித்து வழங்கப்படும் ஆமணக்கு எண்ணெய்க் கருவுற்ற மகளிர் வயிற்றில் தடவினால் கரு சிதையாமல் காக்கப்படுகிறது. சுகப்பிரசவமாகிறது. 6. வைத்தீசுவரன் கோயில் ஆலயத்தில் வழங்கப்படும் திருச்சாந்தருண்டை' ஒரு மகாப்பிரசாதமாகும். கோயிலில் கிடைக்கும் அங்க சந்தான தீர்த்தத்து மண், சடாயு குண்டத்து விபூதி சித்தாமிர்த தீர்த்த நீர் என்பனவற்றைக் கலந்து மிகத் தெய்வத்தன்மையுடன் இப்பிரசாதம் செய்யப்படுகிறது. இத்தகைய அருள் பிரசாதங்கள் கோயில்கள் பலவற்றில் கிடைக்கின்றன. உடலுக்கும், உள்ளத்திற்கும் உயிருக்கும் பேரருள் தருகின்றன.

— —

# வைகுந்த ஏகாதசி



அருள்செல்வி

ஏகாதசி என்பது ஓர் உத்தம புண்ணிய காலம். பரமாத்மாவுக்குப் பரமப் பிரியமான திதி அது. அதைப் போற்றாத புராணமில்லை. அதை துதிக்காத தர்மநூலில்லை. ஆறு வயது முதல் அறுபது வயது வரையிலுள்ளோர் அனைவரும் அதை அவசியம் அநுஷ்டிக்க வேண்டுமென பகவான் ஆணையிட்டார். கங்கையை விட சிறந்த தீர்த்தமில்லை. விஷ்ணுவை விட உயர்ந்த தேவரில்லை. தாயிற் சிறந்ததோர் கோயிலுமில்லை. காயத்ரியைவிட உயர்ந்த மந்திரமில்லை. ஏகாதசியைவிட சிறந்த விரதமில்லை என ஒருமிக்கப் பதினெண்புராணங்களும் அதைப் போற்றுகின்றன. அத்தகைய ஏகாதசி எப்படி உண்டானது?

கிருதயுகத்தில் முரன் என்றோர் அரக்கன் இருந்தான். அவன் மிகக் கொடியவன். பலசாலி. தேவர்களையும் அவரைப் போற்றும் அந்தணரையும் வருத்தி வந்தான். இந்திரன் அவனுக்குப் பயந்து சொர்க்கத்தை விட்டு ஓடினான். கைலாயஞ்சென்று சிவனைச் சரணடைந்தான். அவர் பரிபாலன கர்த்தாவான பரந்தாமனிடம் செல் என்றார். தேவராஜன் பாற்கடலையடுத்து திருமாலை வணங்கித் துதித்தான். அவனது கருத்திற்கிசைந்து கருடத்வஜன் போர்க்கோலங்கொண்டுகிளம்பினார். அமரரனைவரும் உடன் சென்றனர். முரன் அரக்கர் படையுடன் போருக்கு வந்தான். சக்ரபாணி சக்ராயுதத்தால் அசுர சேனை அனைத்தையும் அழித்தார். முரன் அதைக் கண்டு வீராவேசங்கொண்டு எழுந்தான். தான் ஒருவனாகவே இருந்து அமரர் படையைப் புறங்காட்டி ஓடும்படி அடித்தான். முரனும் முராரியும் ஆயிரம் ஆண்டு சமர் புரிந்தனர். முரனது சக்தியைக் கண்டுவிஷ்ணு வியந்தார். தான் களைத்தவர்போல் பயந்து பத்ரிகாச்ரிரமம் சென்றார். சிம்மவதி என்னும் குகையை கண்டார். அது பன்னிரண்டு யோஜனை தூரம் விசாலமானது. அதனுள்ளே சென்று திருமால் பள்ளி கொண்டார். அசுரனும் அவரைப் பின் தொடர்ந்து சென்றான். உறங்கும் புருஷோத்தமனைக் கொல்லக் கருதி வாளை உருவினான். திருமாலின் உடலிலிருந்து ஒரு கன்னிகை உதித்தாள். அவள் அழகிற் சிறந்தவள். ஆயினும் கரங்களில் பயங்கரமான ஆயுதங்களை ஏந்தி நின்றாள். முரனைப் போருக்கழைத்தாள். அரக்கன் அம்பு எடுக்குமுன்பு அம்பிகை ஓர் ஹுங்காரம் செய்தாள். முரன் ஓர் பிடி சாம்பலாகிக் கீழே விழுந்தான். உடனே பரமனும் நித்திரை நீங்கி அசுரனை வென்றதன் சக்தியைக் கண்டு வியந்தார். அவள் செய்த வேலையை கொண்டாடினார். ஏகாதசி என அவளுக்கு நாமம் சூட்டினார். அவள்பிறந்த தினத்திலே உபவாசமிருந்து தன்னைப் பூஜிப்போருக்கு வைகுண்டம் அளிப்பதாக வாக்களித்தார். ஏகாதசி அநுஷ்டானம் செய்வோருக்கு இம்மை சுகம், மறுமை சுகம், கீர்த்தி செல்வம், ஆரோக்கியம் முதலியன உண்டாகும் என்றார். அது மார்கழி மாதம் கிருஷ்ண பட்சத்தில் உதித்ததால் அதற்கு உற்பத்தி ஏகாதசி என்று பெயருண்டாயிற்று. அன்று விதிப்படி உபவாசமிருந்து பரமனைப் பூஜிப்போர் பரமபதமடைவர். இம்மையிலும் கோரிய பயனைப் பெறுவர்.

மார்கழி மாதம் சுக்ல பட்ச ஏகாதசிக்கு மோட்ச ஏகாதசி என்று பெயர். பகவான் மாதங்களில் மார்கழி மாதமாயிருக்கிறார். அதனால் இந்த மாத ஏகாதசியே மிகச்சிறந்ததாகும். இதை பெரிய ஏகாதசி என்றும் வைகுண்ட ஏகாதசி என்றும் கூறுவார்கள். அச்சமயம் அச்சுதனை அர்ச்சிப்போர் வைகுண்டம் செல்வர். மோட்சம் அடைவர். அவர்களது மூதாதைகளும் முக்தி பெறுவர்.



# சுவாமியே சரணம் ஐயப்பா!

டாக்டர் த. அமிர்தலிங்கம்

ரம்பன் என்ற அரக்கனின் பகனான மகிஷாசூரனை ஆதிபராசக்தி வதைத்த வைபவமே நவராத்திரி விழாவாகக் கொண்டாடப்படுவதை நாம் அறிவோம். அந்த அரக்கன் ரம்பனின் உடன் பிறந்தவனான கரம்பனின் மகளே மகிசி என்ற அரக்கி ஆவாள்.

இம்மகிசி பிரம்மனை நோக்கிக் கடும் தவம் புரிந்தாள். 'அரிக்கும் அரனுக்கும் பிறந்த புத்திரனால் அன்றி வேறு எவராலும் தனக்கு மரணம் கூடாது' என மகிசி வேண்ட பிரம்மாவும் அவள் வேண்டிய வரத்தைத் தந்து விட்டார்.

மகிசியை வதைக்கவல்ல அரிகர சுதனையே பாற்கடலைக் கடைந்த காலத்து மோகினியாக வடிவெடுத்துத் திருமாலுடன் இணைந்து சிவபெருமான் தோற்றுவித்தருளினார்.

அப்பொழுது பந்தளநாட்டை ஆண்டு வந்த சிவபெருமானின் பரமபக்தனான இராஜசேகரப்பாண்டியன் தனக்குப் புத்திர பேறு வழங்குமாறு சதாவேண்டிவந்தான். அவனது பிள்ளை இல்லாக்குறையைப் போக்கிச் சிவபெருமான் 'கழுத்தில் மணிமாலையோடு அவதரித்த மணிகண்டனை' மன்னன் காணுமாறு பம்பாநதிக்கரையில் விட்டுச் சென்றார்.

வேட்டையாட வந்த பந்தள மன்னன் குழந்தையைக் கண்டெடுத்து, தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று 'மணிகண்டன்' எனும் திருநாமம் சூட்டி மட்டிலா மகிழ்ச்சியோடு வளர்த்து வந்தான்.

மணிகண்டனுக்குக் கல்வி கற்பித்த அரச குரு மணிகண்டனுடைய தெய்வாம்சத்தைப் புரிந்து கொண்டு, தம் ஊமையும், குருடுமான பிள்ளையின் குறைதீர்த்தருளவேண்ட அவ்விதமே அருள்புரிந்தான் மணிகண்டன்.

மணிகண்டன் இவ்வாறு வளர்ந்து வரும் நாளில் பந்தளநாட்டு அரசிக்கு ஆண்மகவு ஒன்றும் பிறந்தது அக்குழந்தையும் 'இராஜராஜன்' எனும் பெயரோடு வளர்ந்து வந்தது.

மணிகண்டன் வளர்ப்பு மகனே ஆன போதும் இராஜசேகரபாண்டியன் அவன்பால் மட்டில்லா பாசம்கொண்டு வளர்த்து வந்தான், என்றாலும் குணக்கேடான மந்திரி அரசியின் மனதைக்கலைத்து 'பெற்றமகன் இருக்க வளர்ப்புமகனா வருங்காலத்தில் நாடாள்வது? அவனைக் கொன்று விடுவதே மேல். 'தங்களுக்குத் தலைவலி. அதற்கு புலிப்பால் கொண்டு வர வேண்டும். என்று கூறி மணிகண்டனைக் காட்டிற்கு அனுப்பி வைத்தால் புலிக்கு அவன் பலியாகி விடுவான்' என்று உபாயம் கூற அரசியும் அதற்கு இணங்கித்

தனக்கு தீராதத் தலைவலி வந்துற்றதைப் போல் நடித்தாள்.

மகிசியை வதைக்கும் தம் அவதார நோக்கம் நிறைவேறும் தருணம் இதுவே எனக் கருதிய மணிகண்டனும் அரண்மனையை விட்டுத் தனி ஒருவராக உற்சாகத்தோடு கிளம்பி முதலில் தேவலோகம் சென்றான். மகிசியுடன் போர்புரிந்து அவளை பூலோகத்தில் அழுதா நதிக்கரையில் விழுகாறு தள்ளினான்.

மகிசியின் மார்பு மீது நின்று மணிகண்டன் ஆடிய கோர தாண்டவத்தைக் கண்டு சிவ பெருமான் திருமால் பற்றுமுள்ள தேவர்களும் மகிழ்ந்தார்கள். மகிசியும் தன் மீது தாண்டவமாடுபவர் அரிகரபுத்திரனே என். பதை அறிந்து மணிகணடனையே வணங்கி வழிபட்டு உயிர்நீத்தான். அதனால் முன் பிறவியில் காலன் என்ற முனிவருக்கு லீலா என்ற மகளாகப் பிறந்தவளான மகிசியின் சாபம் நீங்குமாறும், சபரிமலையில் மாளிகை புரத்து அம்மனாக அவளுக்குக் கோயில் ஏற்படுமாறும் அருள் புரிந்தார் மணிகண்டர்.

இவ்வாறு தம் அவதார நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்ட மணிகண்டர் தேவேந்திரனை ஆண்புலியாகவும் தேவலோகத்து மாதர்களைப் பெண்புலிகளாகவும் மாற்றி ஆண்புலியின் மீது ஏறி அமர்ந்து பந்தளநாட்டிற்குத் திரும்பி வந்தார்.

கண்டவர் நடுங்கும்படியாக புலிகளுடன் வந்து சேர்ந்த மணிகண்டர் 'தந்தையே! வேண்டு மட்டும் புலிப்பாலைக் கறந்து அன்னையைக் குணப்படுத்த ஆவனச் செய்யுங்கள்' என்று கூற மணிகண்டனின் மகத்துவத்தை அறிந்த அரசியும் மந்திரியும் அவர் திருவடிகளில் விழுந்து மன்னிப்பைக்கோரினர்.

மகிசியின் வதம் காரணமாகவே அவதரித்த அரிகரசுதனும் அவர்களை மன்னிக்குமாறு மன்னனை அறிவுறுத்தித் தாம் தேவலோகம் மீள அனுமதிக்குமாறு வேண்டினார். அப்போது மணிகண்டனுக்கு வயது பன்னிரண்டுதான். மணிகண்டனின் பிரிவைத்தாங்கிக் கொள்ள முடியாத மன்னன் ''எனக்கு ஒரு வரம் தர வேண்டும் ஐயனே! உன் நினைவாக ஒரு கோயில் கட்டுவேன். அங்கு நீ எழுந்தருள வேண்டும்' என்று வேண்ட தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாய் சைவ-வைணவ ஒற்றுமையை நிலைநிறுத்த வந்த ஐய்ப்ப சுவாமியும் அதற்கு இசைந்து தாம் இருந்த இடத்திலிருந்து அம்பு ஒன்றினை எய்து அவ்விடத்தில் கோயில் கட்டுமாறு கூறி மறைந்துவிட்டார். ஐயப்பசுவாமி எய்த அம்பு இராமபிரானுடைய பக்தையான சபரி என்பாள் வாழ்ந்த சபரிமலையில் விழ அவ்விடத்திலேயே ஐயப்பனுக்குப் பந்தள மன்னனும் கோயில் கட்டி வணங்கி வழிபட்டான்.

## மணிகண்ட தேவனின் மகாமந்திரம்

**ஓம் ஹரிஹர புத்ராய புத்ர லாபாய**
**மகாசாஸ்த்ரே சத்ரு நாசனாய**
**மதகஜ வாகனாய பிரத்யட்ச சூலாயுதாய**
**வரவரத சர்வஜனமே வசமானாயஸ்வாஹா !**

பந்தளமன்னன் அகத்திய முனிவரின் ஆலோசனைப்படியே 18 படிகளுடன் கட்டிய ஐயப்பன் ஆலயத்திற்கே இலட்சக்கணக்கான பக்தர்கள் ஆண்டுதோறும் வந்து வழிபட்டு நலம் பெற்று வாழ்ந்து வருகிறார்கள்.

சபரிமலையிலுள்ள ஐயப்ப சுவாமியின் ஆலயம் காசிக்கு ஒப்பான புண்ணியம் உடையதாகும். இதன் அருகே ஓடும் பம்பா நதி கங்கைக்கு ஒப்பாக புனிதம் எய்ந்ததும் ஆகும்.

ஐயப்பன் மலைக்குச் செல்வோர்சுவாமியின் கட்டளையின்படி கார்த்திகை முதல் நாளன்றோ அல்லது அதற்குப் பின்னரும் ஒரு மங்கலநாளிலோ மாலை அணிந்து உள்ளும் புறமும் தூய்மை உடையவராய் ஒருவருக்கும் தீமை எண்ணாது உயர்ந்ததையே சிந்தித்து உயர்ந்த ஒழுக்கங்களையே கடை பிடித்து காலை மாலை இருவேளைகளிலும் குளித்து ஒருமுறை புசித்து 41 நாட்கள் கடுமையாக விரதம் அனுசரிக்க வேண்டும்.

மணிகண்டன் மகிசியை வதைக்கப் புறப்பட்டபோது மன்னன முக்கண்தேங்காயையும் பட்சணங்களையும் கொடுத்தனுப்பியதன் நினைவாக பக்தர்களும் ஐயப்பனின் பூஜைக்குரிய நெய் நிரப்பிய தேங்காய் மற்றும் பூஜைப் பொருட்கள் அடங்கிய ஒரு முடியும், நடந்து செல்லும் வழியில் தேவைப்படும் உணவுப் பொருட்கள் அடங்கிய மற்றொரு முடியுமாக இருமுடி தாங்கிச் செல்ல வேண்டும்.

இதுவே இக்கோயிலுக்குச் செல்வார் மேற்கொள்ளவேண்டிய விரதமுறைகளாகும்.

''இருமுடி தாங்கி ஒரு மனதாகி
குருவெனவே வந்தோம்
இருவினை தீர்க்கும் எமனையும் வெல்லும்
திருவடியைக் காண வந்தோம்'

எனப் பாசமுடன பாடி ஐயப்பன் கோயில் கொண்ட சபரிமலையை நாடி பக்தியோடு வழிபட்டு வரும் அடியார்கள் ஐயப்ப சுவாமிகள் அருளால் எண்ணிய எல்லா நலன்களும் வளங்களும் நிறைந்து மங்களமாக வாழ்வர் என்பது திண்ணம்.

சுவாமியே சரணம் ஐயப்பா!

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. சென்னை-600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ. பிஎச்.டி.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம். அரசினர் தோட்டம், சென்னை-600002.



திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் புலவர் செங்குட்டுவன் அவர்கள் கருணை இல்ல மாணவர்களுக்கு எவர்சில்வர் தட்டு மற்றும் இனிப்பு வழங்குகிறார்கள். சட்டமன்ற உறுப்பினர் திரு. என். பெரியசாமி மற்றும் இணை ஆணையாளர் நிர்வாக அதிகாரி திரு. தி. ஜெயராமன், பி.ஏ. பி.எல். உதவி ஆணையாளர் திரு. சுதர்சன் ஆகியோர் உடன் உள்ளார்கள்.



திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி ஆலயத்தில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் புலவர் செங்குட்டுவன் அவர்கள் தகவல் மையம் திறந்து வைத்தார்கள். தூத்துக்குடி சட்டமன்ற உறுப்பினர் திரு என். பெரியசாமி அவர்கள் உடன் உள்ளார்கள். இணை ஆணையாளரும் ஆலய நிர்வாக அதிகாரியுமான திரு தி. ஜெயராமன், பி.ஏ. பி.எல். விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தார்கள்.